மூவாசை விட்டோமென்றே தம்பிபற-பர
    முத்திசித்தியென்றே தம்பிபற
தேவாசை வைத்தோமென்று தம்பிபற-இந்தச்
    செகத்தை யொழித்தோமென்றே தம்பிபற. (80)

பாழ்வெளிநோக்கியே தம்பிபற-மாயைப்
    பற்றற்றோமென்றேநீ தம்பிபற
வாழ்விடமொன் றெய்தமெனத் தம்பிபற-நிறை
    வள்ளல்நிலை சார்ந்தோமெனத் தம்பிபற. (81)

எப்பொருளுங் கனவென்றே தம்பிபற-உல
    கெல்லாமழியுமென்றே தம்பிபற
அப்பிலெழுத் துடலென்றே தம்பிபற-என்று
    மழிவில்லாதாதியென்று தம்பிபற. (82)



குயிலோடு கிளத்தல்.

காணக்க ணொருகாற்கு மடக்கினவே-செட்டக்
    காமமுதலோரா றொடுக்கினவே
ஞானக்கணொருகாற்குக் கண்டனமென்றே-நிறை
    சந்தோஷமாகவே கூவுகுயிலே. (83)

உலகமோக்காளமென் றோதுகுயிலே-எங்க
    ளுத்தமனைக் காண்பரிதென் றோதுகுயிலே
பலமதம்பொய்ம்மையென் றோதுகுயிலே-எழு
    பவமகன்றிட்டோமென் றோதுகுயிலே. (84)

சாதனங்கள் செய்தவர்கள் சாகார்குயிலே-எல்லாத்
    தத்துவங்கள் தேர்ந்தவர்கள் வேகார்குயிலே
மாதவங்கள் போலும்பலன் வாயாக்குயிலே-மூல
    மந்திரங்களால்மகிமை வாய்க்குங்குயிலே. (85)

கட்டிரண் டறுத்தோர்க்கிட மில்லைகுயிலே-மன
    மோகமற்றோர்க்கிங்கதி யெய்துங்குயிலே
பட்டவினையைச் சார்ந்தறிந்து கொள்ளுங்குயிலே-ஆதி
    காயகிரிநிலையில்வைத் தோதுகுயிலே. (86)

மயிலோடுகிளத்தல்.

ஆடுமயிலே நடமாடுமயிலே-எங்கள்
ஆதியணிசேடனைக்க வாடுமயிலே
கூடுபோகுமுன்னங்கதி கொள்ளுமயிலே-என்றுங்
குறையாமல் மோனநெறி கொள்ளுமயிலே. (87)

இல்லறமேயல்லவென் றாடுமயிலே-பத்தி
இல்லவர்க்கு முத்திசித்தி யில்லைமயிலே
நல்லறமே துறவறங் காணுமயிலே-சுத்த
நாதாந்தவெட்டவெளி நாடுமயிலே. (88,

கற்றூணைப் போல்மனதைக் காட்டுமயிலே-வரும்
காலனையுந் தூரத்தி லோட்டுமயிலே
பற்றாடுருவவே பாயுமயிலே-அகப்
பற்றுச்சற் றில்லாமற் பண்ணுமயிலே. (89)

அன்னத்தொடு கிளத்தல்.

கண்ணிகள்.

சிறுதவளை தான்கலக்கிற் சித்திரத்தினிழல்மறையும்
மறுவாயை தான்கலக்கில் மதிமயங்குமடவனமே. (90)
காற்றில்மரமுறியுங் காட்சியைப்போல் நல்லறிவு
தூற்றிவிடிலஞ்ஞானந் தூரப்போமடவனமே. (91)
அக்கினியாற் பஞ்சுபொதி யழிந்திட்ட வாறேபோல்
பக்குநல்லறிவாலே பாவம்போ மடவனமே. (92)
குளவிபுழுவைக்கொணர்ந்து கூட்டிவுருப்படுத்தல்போல்
வளமுடையவுன்மனதை வசப்படுத்து மடவனமே. (93)
அப்புடனே யுப்புச்சேர்ந் தளவுசரியானதுபோல்
ஒப்பறவே பிரமமுட னொன்றிநில்லு மடவனமே. (94)
காய்ந்தஇரும்புநிறங் காட்டுதல்போ லாத்துமத்தை
வாய்ந்திலங்கச்செய்து வளம்பெறுநீ மடவனமே. (95)

புல்லாங்குழலூதல்.

வேறுசந்தம்,

தொல்லைப்பிறவி தொலைக்கார்க்குமுத்திதான்
இல்லையென் றூதுகுழல்-கோனே
இல்லையென் றூதுகுழல். (96)

இந்திரபோகங்க ளெய்திடுந் தொல்லையென்
றந்தமா யூதுகுழல் கோனே
அந்தமா யூதுகுழல். (97)

மோனநிலையினில் முத்தியுண்டாமென்றே
கானமா யூதுகுழல்-கோனே
கானமா யூதுகுழல். (98)

நாய்போற்பொறிகளை நானுவிதம்விட்டோர்
பேயனென் றூதுகுழல்-கோனே
பேயனென் றூதுகுழல். (99)

ஓடித்திரிவோர்க் குணர்வுகிட்டிடும்படி
சாடியேயூதுகுழல்-கோனே
சாடியேயூதுகுழல். (100)

ஆட்டுக்கூட்டங்களை யண்டும்புலிகளை
ஓட்டியேயூதுகுழல்-கோனே
ஓட்டியேயூதுகுழல். (101)

மட்டிக்குணமுள்ள மாரிசநாய்களைக்
கட்டிவைத்தூதுகுழல்-கோனே
கட்டிவைத்தூதுகுழல். (102)

எட்டாதநாயெல்லாங் காவலுக்கெப்போதும்
கிட்டாதென் றூதுகுழல்-கோனே
கிட்டாதென் றூதுகுழல். (103)

பெட்டியிற்பாம்பெனப் பேய்மனதடங்க
ஒட்டியேயூதுகுழல்-கோனே
ஒட்டியேயூதுகுழல். (104)

எனதென் றும்யானென் று மில்லாதிருக்கவே
தனதாகவூதுகுழல்-கோனே
தனதாகவூதுகுழல். (105)

அற்றவிடமொன்றே யற்றதோடுற்றதைக்
கற்றேனென் றூதுகுழல்-கோனே
கற்றேனென் றூதுகுழல். (106)

## பால்கறத்தல்.

வேறு சந்தம்.

சாவாதிருந்திடப் பால்கற சிரம்
தன்னிலிருந்திடும் பால்கற
வேவாதிருந்திடப் பால்கற வெறும்
வெட்டவெளிக்குள்ளே பால்கற (107)

தோயாதிருந்திடும் பால்கற முன்
தொல்லைவினையறப் பால்கற
வாயாலுமிழ்ந்திடும் பால்கற வெறும்
வயிறுறவுண்டிடப் பால்கற. (108)

நாறுதிருந்திடும் பால்கற நெடு
நாளுமிருந்திடப் பால்கற
மாறுதொழுகிடும் பால்கற தலை
மண்டையில்வளரும் பால்கற. (109)

உலகம்வெறுத்திடும் பால்கற மிக
ஒக்காளமாகியே பால்கற
கலசத்தினுள்விளை பால்கற நிறை
கண்டத்தினுள்விழப் பால்கற. (110)

எப்பம்விடாமலே பால்கற வரும்
ஏமன்விலகவே பால்கற
இப்பொறியோய்ந்திடப் பால்கற பா
சிவத்துடன்சாரவே பால்கற. (111)

அன்றுவின்மேல்வரும் பால்கற பே
ரண்டத்திலூறிடும் பால்கற
மின்றேட்டிலில்லாத பால்கற தொல்லை
வேதனைகெடவே பால்கற. (112)

## கிடைகட்டுதல்.

வேறுசந்தம்.

இருவினையாமாடுகளை யேகவிடுகோனே உன்
இடக்குமனமாடொன்றை யடக்கிவிடுகோனே. (113)

சாற்றரியநைட்டிகரோ தற்பரத்தைச்சார்வார் நாளும்
தவமவமாய்க்கழிப்பவரோ சனனமதில்வருவார். (114)

அகங்காரமாடுகள்முன் றகற்றிவிடுகோனே நாளும்
அவத்தையெனுமாடைந்தை யடக்கிவிடுகோனே. (115)

ஒருமலத்தையெனுமாட்டை பொதுக்கிக்கட்டுகோனே உடன்
உறையுமிரு மலந்தனையு மோட்டிக்கட்டுகோனே. (116)

மும்மலத்தனெனுமாட்டை முறுக்கிக்கட்டுக்கோனே. மிக
முக்காலநேர்மையெல்லா முன்பறிவாய்கோனே. (117)

இந்திரியத்திரயங்களை யிறுக்கிவிடுகோனே என்றும்
இல்லையென்றேமாணக்குழ லெடுத்தூதுகோனே. (118)

உபாதியெனுமூன்றாட்டை யோட்டிவிடுகோனே உனக்
குள்ளிருக்குங்கள்ளமெல்லா மோடிப்போங்கோனே. (119)

முக்காயமாடுகளை முன்னங்கட்டுகோனே இனி
மோசமில்லைநாசமில்லை முத்தியுண்டாங்கோனே. (120)

கன்மமலமாடுகளைக் கடக்கக்கட்டுக்கோனே மற்றக்
கன்மத்திரயப்பசவைக் கடையிற்கட்டுகோனே. (121)

காரணக்கோமூன்றனையுங் கால்பிணிப்பாய்கோனே நல்ல
கைவசமாஞ்சாதனங்கள் கடைப்பிடிப்பாய்கோனே. (122)

வேறு தரு.

பிரமரந்தரத்திற்பே ரொளிகா ணெங்கள்கோனே வாய்
பேசாதிருக்கும்பெரு நிட்டை சாரெங்கள்கோனே. (123)

சிரமதிற்கமலச்சேவை தெரிசிதெங்கள்கோனே முத்தி
சித்திக்குந்தந்திரஞ்சித்தத் தறியெங்கள்கோனே. (124)

விண்ணூடிவந்தவை மெய்யறிவிற் காணுங்கோனே என்றும்
மெய்மெய்யிற்கொண்டு மெய்யறிவிற்செல்லுங்கோனே. ()

கண்ணூடியுன் னுள்ளே கண்டுபார்த்துக் கொள்ளுங்கோனே-ஞானக்
கண்ணான்றிக்கண்ணூடி காணவொண்ணா தெங்கள்கோனே. ()

ஒளியமானதைச் சுட்டுவா ரெங்குமுண்டுகோனே புத்தி
சூட்சுமமேயதைச் சுட்டுமென்றெண்ணெங்கள் கோனே. (127)

நித்தியமானது நேர்படிலே நிலைகோனே என்றும்
நிற்குமென்றேகண்டு நிச்சயங்காணெங்கள்கோனே. (128)

சத்தியும்பரமுந் தன்னுட்கலந்ததேகோனே நிட்டை
சாதிக்கிலிரண்டுந் தன்னுள்ளே காணலாங்கோனே. (129)

மூகைபோலிருந்து மோனத்தைச் சாதியெங்கள்கோனே பர
மூலநிலைகண்டு முட்டுப்பிறப்பறுகோனே. (130)

இடைக்காட்டுச் சித்தர் பாடல் ஞானம்,
முற்றிற்று.



மதுரை தலைவிரித்தையா மடம் நரசிங்கஞ்சேர்வைகார ரென்ற கருத்தச்சேர்வைகாரர் அவர்களிடமிருந்த ஏட்டுப் பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

கடவுள் துணை.

ஐம்பத்திரண்டாவது:

புண்ணாக்குச் சித்தர் திருவாய் மலர்ந்தருளிய

# முப்பூச் சுண்ணச் செயநீர்.



ஆதி மயமா மானுர் திருவருள்
சோதி மயமாஞ் சோமன் நிலையிற்
போத மயமாம் பூரண காமம்
நீதி யறியார் நிலைப்புக் காலே. (1)

காலடி சத்தி வழியைப் பாரும்
மாலடிக்கத் தருக வெழுக்கும்
வாலையிற் சென்று மெழுமிறப் பப்பா
மாலிற் றிரியம் மட்டாச் சாமே. (2)

சாயான சுத்தி சத்திக்கு தப்பா
பாமாஞ் சிவத்துக்குப் பரம விரவியாம்
நிரயாம் வழியைச் சென்று மரியார்
ஆறும் பரித்த அடியினிற் காணே. (3)

அடியாரு குட லைபிடை கூட்டி
வெடியுப்பு காலுடன் நீர்தொன்று கூட்டித்
திடன்புளி காலுடன் சினமோன் முக்கிப்
படியே அரைக்கப் பழச்சாறு விட்டே. (4)

சாறுவிட் டேயொரு சாம மரைத்தபின்
மீறிய வில்லை வெயிலவன் கண்டபின்
மீறிடு சித்தக் காலடியிற் சுண்ணம்
முற்றுங் கண்ணீர் சாரத்தைக் கூட்டே. (5)

சாமமொன் றுகத் தயவாய் நொருக்கி
நீரப் பனியி லிருக்கச் செயயாகும்
...

வாரச் செலத்தின் வளர்பூர மொன்றுக்கும்
வீரமொன் றுக்கும்விள் பத்துக் கொன்றே. (6)

பத்துக் கொன்றாகப் பொடித்திடு பண்பாய்
சித்துக்க ளாடுந் தெருவிற் போனாலும்
மொத்தச் சரக்குக ளெல்லா மொடுங்கிடும்
அத்தமுங் காணு மடியொன்றி னாலே. (7)

ஒன்றான மூலம் வழலையுப் பாகும்
அன்றிச் சிவலை யாரு மறிந்திலர்
குன்றாய் வளருங் கூத்துக் கிதாகும்
நன்றான வாதம் நல்கிடக் காணே. (8)

காணாப் பொருளைக் கண்டவர் ஞானி
பூணா பரணம் பொன்னடி மூலம்
வீணா யிராது வெட்டவெளி காண
வாணாள் பெண்ணுடன் ரண்டும்பே ராமே. (6)

ரண்டான பேரையும் நயமா யறியார்
பெண்டை யறிந்தாலும் பித்தனைக் காணார்
தொண்டன்தான் கண்டாற் சுகசித்த னுவான்
எண்டிசை யெல்லா மிருப்பவ னாமே. (10)

இருக்கின்ற சட்டை முனியுமென் மகன்காண்
கருக்குழி வித்தையைக் காட்டினேன் நானே
வெருக்கிய மூலர்க்கும் பிள்ளைக்கும் வழிசொன்னேன்
குரு வெனக்கப்பா நந்தீச ராமே. (11)

ஆமப்பா ஆவியுஞ் சொல்லப் பொருள் கண்டேன்
நாமப்பா கண்டதை நாட்டினேன் பத்தர்க்கு
ஏமப்பா பிழையுங்கோ வென்றுநான் பாடினேன்
வாமப்பா மதியமுதங் கொண்டவர் வாதியே. (12)

வாதந்தான் காண வளர்சத்தி தனக்கும்
நீதியாய்ச் சிதம்பரம் நித்தியல் பூசித்தே
வாதக்கா யிந்த வளர்பூசை செய்திடில்
ஆதி யடிமூல மறிரெண்டுங் காண்பான். (13)

தூன்றிடு மஞ்சாம்காளிம் சுரர்குரு புடந்திற்போட
நன்றிகொள் துருசுச்சுண்ணம் நல்லதோர் சிங்கிக்காமே. (21)

சிங்கியாந் துருசுச்சுண்ணஞ் செயநீரு வைத்தபின்பு
எங்குள்ள சரக்குக்கட்டு மிசைந்ததோர் மெழுகுமாகும்
அங்குள்ள சுண்ணமெல்லாம் ஊதிட்ச்சுண்ண மாமே!
வங்கத்தி லப்புச்சுண்ணம் வகையுடன் நிமிளைக்கப்பே, (22)

காணலாங் காரசாரச் சுண்ணத்தைக் காய்ந்ததப்பு
ஊணவே ஊதச்சத்து மியமா யுருகும்பாரு
மேனியாம் தராச்சத்து மியமா யுருகுமப்பா
வானியா மடையனீய மப்படியுண்டமீயம். (23)

ஈயந்தான் சிப்பியீயம் பாசாண மீயமாகும்
ஈயந்தான் லோகமப்பா எமடீ மீயமாகும்
ஈயந்தா னெட்டுமீய மட்டமிக் கிண்ணமாச்சு
ஈயந்தான் கிண்ணர்தன்னிற் சரக்கெல்லாஞ் சணத்திற்கட்டும். (24)

கட்டியசரக்கை யெல்லாம் கிண்ணத்திற் சாரநீரிற்
றிட்டமா யெட்டெட்டுள்ள சரக்கெல்லா மெழுகதாகும்
அட்டலோகங்கள் வேதை யறுபத்தி நாலுபேரும்
இட்டறுபத்துநாலு மெழுகெல்லாஞ் சரியாய்த்தூக்கே. (25)

தூக்கியே துருசுங்கூட்டிப் பீங்கானில் வைக்கநீராம்
போக்கினி லாரார்சொல்வார் புகழ்பெற்ற நீரின்போக்குத்
தாக்குள்ள மலையும்பொன்னுஞ் சதபேதி ராசபேதி
ஆக்கிய நீரினாலே அண்டமுந் தண்ணீராமே. (26)

தண்ணியாக் தங்கமெல்லாந் தண்ணியாம் வேதைகோடி
மண்ணில்லை மரமுமில்லை மலைகளும் பொன்னாய்ப்போகும்
கண்ணினாற் பார்க்கலாகா காயந்த வேதையப்பா
வண்ணமாய்க் கேட்கவேதை பார்க்கவே மனத்திற்செல்லே. (27)

செல்லப்பா வாதங்காணச் சிரத்துட னமுதங்கொள்வாய்
அல்லப்பா பகலுமில்லை அரனிவ னுருகுமப்பா
வெல்லப்பா காயசித்தி சடலத்தைச் சுத்தியேது
வல்லமை கற்பங்கொள்வாய் வளர்கின்ற கற்பந்தானே. (28)

வேறு.

கற்பமேது கர்பமேது காசிலியிற் பத்தரே
அற்பமேது சத்தசாக ரங்களேது காணவே
வெற்பமிப்ப தேதடா விளக்குபத்த ரேதடா
வற்பமான தெய்வடா வண்டர்நெஞ் சறியவே. (29)

நெஞ்சமேது அங்கமேது நிலையிருந்த தேதடா
கொஞ்ச பெண்களேதடா குறிப்பறியா மட்டையா
வஞ்சியர்தன் அல்குலேது மானமேது நாரியர்
கொஞ்சவாச லானது குடிகெடுக்குங் குழியிதே. (30)

சிந்து.

குழியை நம்பாதே பானக்
குழியை நம்பாதே (பானக்குழியை)
குழியதான கிட்டிக்கம்பு கொண்டுகை நெருக்கிய
குழியை வாய்த்திரியும் பத்தர் குறிப்பறியா மட்டைகாள். (குழியை)

செத்துக்கெட்டுப் போனவுடல் சிலகாலங்கள் வாழ்வது
ஒத்துப்புணர் பெண்ணாசைகொண்டு ஒகிரியிதே சிவனேது
உத்துணர்ந்து பாரடா உண்மையான மூலத்தை
பத்தரென்ற பேர்களேது பாருலகில் மயங்கியே, (32)

நடுநின்ற சிவனேது உத்துணர்ந்து பாரடா
நாடுகின்ற நரகமேது சொர்க்கமேது நல்வினை
தேடுகின்ற தீவினைதா னேதடா செகத்திலே
மூடஞானி ஞானிகாள் முக்திய மிகுதியே. (33)

முக்கிய பூலோகமு முற்றியென்பார் செற்றவர்
மெய்க்குருவாம் பிதிர்க்களேது விண்புலம்பு மட்டைகாள்
கைக்குள்வெண்ணெ யிருக்கிறதோர் காயமொன்று மறிவிலார்
சயக்கிய சங்காத்தமேது நிர்த்தமேது ஞானியே. (34)

ஞானிஞானி நானென்பான் நற்சடல மறிகிலான்
மாணிபங்க னேதடா மாகிலங்க னேதடா
மேவியால தேதடா மின்னார்கொங்கை பிரியே
தானவனு யிருந்தவர்கள் தானுணர பிறமே. (35)

மீறுகின்ற சடலமதில் மேவுஞ்சதை யேதடா
ஊறியே பருத்தகொங்கை யுலுத்தரை மயக்கவே
கூறுள்ள மெய்யிலேதான் பருத்ததோர் சிலந்திதான்
நீறியோர் பிறிங்கிருய நிலையிருந்த மகிமையோ. (36)

மகிமையான தேவரேது வல்லமைக ளேதடா
மகிமையான முனிவரேது ரிஷிகளேது கற்பத்தால்
மகிமையாவ தேதடா மற்றதெல்லாஞ் செத்தது
மகிமையாகும் வாதமும் மருளநின்ற வண்ணமே. (37)

வண்ணமானஜீவசெந்து மார்க்கமாவ தேதடா
எண்ணமான விருக்ஷமது யெல்லாம் கற்பமாகுதே
பண்ணமானதேவர்களும் பாரில்வந்து வாழ்பவர்
எண்ணியமித் தேவரும்பர் என்னும்வாத திண்ணமே. (38)

என்றுசொல்லி விளங்கவேஇராமாயண மென்றுமே
கன்றெனப் புராணகாவி யங்களான சோதிசம்
மன்றுள்ளோர் மயங்கவே வரவிடுத்த திக்கெல்லாம்
என்றுமேசா காதபுத்தி யென்பதேயுன் யோகமே. (39)

யோகமும் அறியவேணும் உற்பன மிருக்கவேணும்
ஆகமுந் தியானமு மறிந்துணர்வர் ஞானமாம்
யோகவஸ் திவனென யிருக்கலாமென் றெனக்குத்தான்
மோகமே தவிர்த்துஞான யோகமீறும் பாரிலே, (40)

பாரிலே பிறந்திருக்கப் பாரமில்லை யப்பனே
சீருடன் துறவிலே சென்றிருப்ப தருமைகாண்
ஏருலவு சத்திபாத மிணைபுரிந் திரியடா
காருலவு பூரணங் கண்டசெய்தி யுண்மையே. (41)

உண்மையான வழலைபுப்பு உத்தபூ மகத்துவம்
உண்மைகறி யுப்புடன் உருசையை யறிந்தவர்
அண்ணாலாங் குருவெனக்கு அண்டநீர் மகத்துவம்
வண்ணமான ரண்டுபேரும் வாய்திறக்க நீதியோ. (42)

நீதியான பூரணம் நிலையறிந்தோன் வாசியாம்
ஆதிமூல மடியடா அருளிருந்த சத்தியாம்

சோதியாஞ் குருக்களும் கருக்களும் வெளியதாய்
வாதமே பொய்யாதடா மகிழ்ந்துபாரு சத்தியே. (43)

சத்தியா மடியடா தனக்குப்போம் பூரணம்
உத்தமோ ரிந்துப்புடன் உணர்வழலி யுப்படா
சித்தியான போதமே சிறந்திருக்கு மாகநீர்
முத்திபெற்ற போதிலே முப்புமறி வார்களே. (44)

முப்புவு முடிந்தபின் முதல்வனான சிவனடா
அப்புவளர் போதிலே அடக்கலாஞ் சரக்கெலாம்
ஒப்பமான ஆவிடத்தி லொடுக்கியயென் னாலப்பா
அப்பனே கருக்கிருக்கன் டானவாறு சத்தியே. (45)

புன்னாக்குச்சித்தர் முப்பூச் சுண்ணச் செயனீர் சரு.

முற்றிற்று.



மதுரை வடக்குமாசி வீதியிலிருக்கும் பாத்திர வியாபாரம் க. சா. ம. கணபதியாபிள்ளை யவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

கடவுள் துணை.

ஐம்பத்துமூன்றாவது:

# புண்ணாக்குச்சித்தர்பாடல்



தேவிமனோன்மணியாள் திருப்பாதங்காணவென்று
தாவித்திரிந்தேனே ஞானம்மா
சரணஞ்சரணமென்றே. (1)

அஞ்ஞானமுங்கடந்து அறிவைமிகச்செலுத்தி
மெய்ஞ்ஞானங்கண்டுகொண்டால் ஞானம்மா
விலையிலாரத்தினமடி. (2)

முட்டையினுள்ளே முழுக்குஞ்சிருப்பதுபோல்
சட்டையாந்தேகத்துள்ளே ஞானம்மா
தானுயிருநிற்பதடி. (3)

விட்டகுறைவாராமல் மெய்ஞ்ஞானஞ்சேராமல்
தொட்டகுறையானதினால் ஞானம்மா
தோன்றுமெய்ஞ்ஞானமடி. (4)

தம்முளறியாமல் சகத்தைத்தெரியாமல்
சம்சாரமெய்யென்று ஞானம்மா
சாகரத்திலேயுழல்வார். (5)

இஷ்டர்க்குபதேசம் எந்நாளுஞ்சொல்லிடலாம்
துஷ்டர்க்குபதேசம் ஞானம்மா
சொன்னால்வருமோசம். (6)

முத்திபெறுவதற்கு முதலாய்நினைத்தவர்க்கும்
நித்திரையும்விட்டு ஞானம்மா
நினைவோடிருக்கணுமே. (7)

நினைவக்கனவாக நீயென்வழியேபார்க்கில்
சினமாய் வருமெமனும் ஞானம்மா
தெண்டனிட்டுப் போவானே. (8)

போகவிளக்கொளியா லுண்மைதெரியாமல்
மோகமெனுங் குழியில் ஞானம்மா
முழுகியே போறார்கள். (9)

சாஸ்திரங்கற்றறியாச் சாமியார் தானுமி
ஆஸ்திதேடநினைத்து ஞானம்மா
அலைவார் வெகுகோடி (10)

பூச்சும்வெறும் பேச்சும் பூசையுங்கைவீச்சும்
எச்சுக்கிடந்தானே ஞானம்மா
ஏதொன்று மில்லையடி. (11)

பிணத்தையலங்கரித்து பெண்கள்தலைவிரித்து
கணக்காகத் தெரியாமல் ஞானம்மா
கலக்கியழுதாரடி. (12)

மேளக்கள்போடுவதும் வெகுபேர்கள்கூடுவதும்
காரியமென்றுமல்லவே ஞானம்மா
நகைக்கேதபழுவாரடி (13)

கோவணமுமிரவல் கொண்டதாலியிரவல்
தேவமாதாயிரவல் ஞானம்மா
தெரியாதவர்யாரே. (14)

செத்தவனையபானுஞ் சேர்க்கும்வரையில்ஞானம்
உத்தமர்போலப் பேசி ஞானம்மா
உலகிற்றிரிவாரடி (15)

காட்டிலிருந்தாலுங் கனகதவஞ்செய்தாலும்
காட்டுங்குருவில்லாமல் ஞானம்மா
கண்டறியவாகாதே. (16)

கல்விவெளிச்சமது ஞானவெளிச்சமது
எல்லாவெளிச்சமது ஞானம்மா
மனவெளிச்சமடி. (17)

சம்சாரமென்றுஞ் சாகரமாமென்றும்
இம்சையடைவோர்கள் ஞானம்மா
யிருந்துபயனுவதென்ன. (18)

காத்தடைத்து வந்ததிது கசுமாலப்பாண்டமிது
ஊத்தச்சடலமிது ஞானம்மா
உப்பிலாப்பொய்க்கூடு. (19)

அஞ்சுபேர்கூடி யரசாளவேதேடி
சஞ்சாரஞ்செய்ய ஞானம்மா
தானமைத்த பொய்க்கூடே. (20)

புண்ணாக்குச்சித்தர் பாடல் உம்

முற்றிற்று.





மதுரையைச்சேர்ந்த சாமநத்தம் கிராமம் மடத்திலிருக்கும் செல்லச்சாமியா ரவர்களிடம் வாங்கிய ஓலேயேட்டுப் பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.

உ

குருவே துணை.

ஐம்பத்து நான்காவது:

சோங்கனார் திருவாய் மலர்ந்தருளிய

# சூட்ச தெரிசன ஞானம் சு.

சொல்லுகிறேன் சூட்சத்தின் மகிமைகேளு
    சுருதிவழிக் கெட்டாத சூட்சமப்பா
வெல்லுவையோ சொல்லுதற்குப் பிள்ளாய்பிள்ளாய்
    வேதாந்த சித்தாந்தப் பரையினுள்ளே
அல்லுபக லற்றமகா மேருநவியுச்சி
    ஆதித்தன் மதியுதித்த பரவெளிக்குள்
நில்லுமயிர்ப் பாலங்கேருப் பாறுக்கப்பால்
    நேர்பாந்து அகாரநடுக் கொம்புதானே. (1)

கொம்புநுனி மேலேதான் வளைத்தாற்போலக்
    குவித்தமுனை முக்கோணக் கதவுமயிராளவு
சம்புடதக் தூக்கிநின் றுடுமென்று
    சாற்றினேன் மனமுன்னி யறியமைந்தா
இன்பமற அக்கென்றே சுடரிருக்கு
    இறையளவு கதவுபிரட் டிருத்தியூனி
அம்மெனவும் சுடர்க்கலையை யேத்தும்போது
    ஆகாரா வெனமுழக்கும் நடனங்காணே. (2)

காறுவது ஆதித்தன் மதிமுழக்கம்
    கதவடைத்து எதினவர் கழிவார்தானும்
பூறுவது மண்டலங்கள் மூன்றுக்கப்பால்
    புரியுஞ்சா க்ரங்கணிர் கணிரென்றேசை
சோறுவது மதிமுழக்கங் கண்டுதேரு
    சூட்சமதிற் சூட்சாடம் புரிந்துமப்பால்
ஆறுமது பெண்ணுமது ரெண்டுமற்ற
    துக்கினிமி லெல்லியெனும் வாசல்தானே. (3)

எல்லையெனும் வாசலுக்கு அடையாளங்கேள்
இருபுறமுங் கூடவெளி வேறாறு
அல்லும்பக லற்றவெளி தொட்டிட்டாட்டும்
அடையாளம் முனைமேலோ ரங்குலத்தில்
சல்லையற்ற கலைநாலுங் கட்டிநின்ற
சற்குருவும் பராபரமாய் நிறைந்தசோதி
வல்லவர்கள் கண்டிருப்பார் சொல்லாரென்றே
மைந்தனே நாசிநுனி நடுவேகும்பே. (4)

கும்பித்து வோங்கையிலே யமுதஞ்சிந்தும்
கொடிதான ஜீவனல்லோ திரட்டுவார்பார்
நம்பிக்கை யாத்தாளே அமுதமிவ்வாள்
நலமாகத் திரட்டுவாள் பரத்தில்வாழப்
பம்பூத்த நேர்பரத்தின் வழியேபாயும்
பரிவாக நந்தியின்மே லறுகோணத்தில்
ரெம்பித் துவாரவெளிக் குள்ளேபுக்கும்
நேராகச் சிகாரமென்று நினைத்திடாயே. (5)

நிலைக்குநில்லு சுழிமுனையை கட்டநின்றாய்
நேராகத் துவாரத்திற் பளிச்சென்றாற்போல்
இலைக்குறட்டால் யேறுசுத்தித் தங்கக்கம்பி
யெழும்புமப்பா பளிச்சென்றே பிரகாசிக்கும்
தலைக்குலையால் நிலைக்குவந்து அமுதமுண்ணும்
சோதியாம் பராபரத்தின் செயலென்றெண்ணு
மலைக்காதி யந்தமில்லா திடத்தமர்ந்து
மகிழ்ந்துநிற்போர் கட்டிநின்ற இடந்தான்காணே. (6)

கொங்கணர் சூட்ச தெரிசன ஞானம் ௬.

முற்றிற்று.



வேதாரண்யம் ஸ்ரீலஸ்ரீ சிவராஜயோகி மௌனகுருசாமியவர்களிடம் வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்தசாஸ்திரம் அச்சிடலானது

உ
குருவே துணை.

ஐம்பத்தைந்தாவது:
கோங்கணர் திருவாய் மலர்ந்தருளிய

# திருமந்திர ஞானம் ௰௨.

மூலத்தே அவ்வுமென்று முன்னேயூறு
முயிகண்டா லங்கென்று பின்னேயூறு
காலத்தே பளிச்சென்றுற் றிங்கென்றூறு
கைமுறைதான் மூன்றுவகை காணுங்காணும்
ஞாலத்தே மின்னலுட னொளிபோற்காணும்
தயங்காதே மனமுன்னே சாரவூறு
சூலத்தே யுண்டசிவன் முக்கண்போல
அடங்காத தீபவொளி யழுத்திப்பாரே. (1)

அழுத்தியக்கே பளிச்செனப் பேரண்டத்தூத
அப்பனே சித்தித்தால் சத்தியாச்சு
வழுத்தியக்கே கும்பகமாம் முனிகோனூது
வாயக்கே மவுனமா மாயைபோகும்
கொழுத்தியக்கே சமைப்பதற்கு தீயும்வேண்டாம்
கூரான சிகாரத்தூத பூதபத்தும்
கழுத்தியக்கே நெடும்பாதை போடியாடச்
செல்லார்க ளிம்முறையைச் சூட்டிப்பாரே. (2)

சூட்டியக்கே பார்ப்பதற்கு வகையைக்கேளு
சொல்லுகிறேன் பேய்மக்காள் சும்மாவல்ல
கூட்டியக்கே பிடகலையிற் பூரித்தப்பா
வடைவாக மூலத்தே நினைவாய்க்கும்பி
நீட்டியக்கே பிங்கலையி லுள்ளேரேசி
கோசக மெள்ளமெள்ள வேத்தியாபீ
பூட்டியக்கே உரைத்தாக்கால் காடிசத்தி
புகழான வாதபித்தம் வாய்வுபோமே. (3)

போமப்பா மூன்றுவகை கோயுப்லெந்தா
புகழான காயமுந்தா னிருக்கும்மெத்த
வேமப்பா நல்வினைதீ வினையும்தீரும்
விதமான வைம்புலனும் விரைந்துபோகும்
ஓமப்பா ஓங்காரம் நாதமேலே
ஒருகோடி ரவிபோல ஓங்குமோங்கும்
ஆமப்பா இப்படியே கண்டேன் கண்டேன்
அப்பனே நீங்களுமிப் படிதான்பாரே. (4)

பார்க்கையிலே அவ்வென்று உவ்வும்கூடும்
பரவியதோர் மகாரத்திற் சேருங்காலம்
ஏர்க்கையிலே உகாரமாய் மேலேயேறும்
யிதுகாணும் பிரசாத வித்தைமார்க்கம்
ஆர்க்கையிலே பளிச்சென்று நந்திகாணும்
அப்பனே யிதிலேயோடே வாசிசேரும்
சேர்க்கையிலே ஆகாரமுடன் மகாரத்தோடு
சிறக்கவே வாசிரெண்டும் நாதவிந்தே. (5)

நாதமும்விந் தெனவேவா சிக்குப்பேரு
நலம்பெரிய ரவிமதியு மதற்குப்பேரு
வாதமென்றுஞ் சித்தியென்று மதற்குப்பேரு
மருவியதோர் சிவசத்தி யதற்குப்பேரு
போதமென்று மனமென்று மதற்குப்பேரு
பூமியென்றும் விண்ணென்று மதற்குப்பேரு
ஆதியென்றும் அந்தமென்று மதற்குப்பேரு
அருளொளியாய் நின்றநிது ரெண்டுந்தானே. (6)

நின்றான வெழுத்திரண்டு மொன்றாய்க்கூட்ட
நிலையில்லை கலையில்லை நேசமில்லை
ஒன்றான மனமில்லை யொன்றுமில்லை
ஓகோகோ தாழ்வில்லை யுயரமில்லை
கன்றான வெளியில்லை யொளியுமில்லை
காண்பதுவுங் காணாது மிரண்டுமில்லை
மன்றான பூதம்கொண்டு விண்ணுமில்லை
மாசில்லை தெரிசில்லை மதித்திலேனே. (7)

மறிபத்து நிறிபத்து மனமுமத்து
மருவியதோர் யோகமத்து ஞானமத்து
கோறிபத்து சூக்ஷமத்து லெச்சையத்து
கூடுவதுங் கூடாது மிரண்டுமத்து
பறிபத்து போதமத்து பறப்புமத்து
பாழ்வெளிக்குள் முடிவத்துப் பார்ப்பதத்து
உறிபத்து ஒடுக்கமத்து வொன்றுமின்ற
உத்தமனே பொருபொருளை யுணர்ந்திலேனே. (8)

உணர்வத்து அறிவத்து பொறியுமத்து
ஒன்றென்ற சொல்லத்து ஒன்றுமத்து
புணர்வத்து கெற்பமத்து வாய்பூவத்து
பதிந்துநின்ற வோரத்துப் பறப்புமத்து
கணர்வத்து குருவுமத்து ஜோதியத்து
சுத்தவெளிக் காடுமத்து அசையுமத்து
எணர்வத்த தேதேதோ நான் பாறுங்காணேன்
யென்மக்காள் நீங்களின்றத்த றியம்பினீரே. (9)

இயம்பிநாம் பூரணத்தி லடுத்தால்ஞானம்
மிறக்குமக்காள் கரையில்லை லக்கமில்லை
இயம்பிநாம் போதமென்பா ரதுவேதென்றால்
யெம்மட்டோ கண்மட்டுக் கெய்தாதென்பார்
இயம்பிநாம் நிறந்தரந்தா னென்பார்வல்லோர்
என்னவென்று லென்னமோ யென்பாரய்யோ
இயம்பிநாம் நிர்மலத்தைக் கண்காண்பாரோ
யேதுபோ பேச்சல்ல வென்றுசொல்லே. (10)

சொல்லான சத்திபப்பா யுப்புங்கொப்பும்
சொற்பெரிய பிசனப்பா பூரம்பூரம்
வல்லான குருசிப்பப்பா மாயைமாயை
மருவியதோர் காமப்பா பிசனிசன்
கல்லான சத்திபப்பா சாரம்சாரம்
கடியதொரு குடனப்பா பிசனிசன்
வல்லான செண்டினக்கள் வாசியாச்சு
மக்கினே சிவசத்தி சன்னாய்பன்னே. (11)

பண்ணியதோ ரிரண்டுகவ்னா மொன்றுய்க்கூட்டி
பச்சையிட்டு அறைக்கச்சூ தத்தைக்கொல்லும்
ஒண்ணியதோர் சூதமதுவென்னோஒன்று
ஓகோகோ நிஷ்களத்தோ டொக்குமொக்கும்
புண்ணியமாந் தேகமொத்த சிஷனுனல்
பொருளருளும் கைவசமாய்ப் புகழ்ந்துபாரு
அன்ணியமாய் முன்சொனமித் திரத்துக்கொப்பாய்
அறைந்திட்டேன் வேதாந்த மறைந்திட்டேனே. (12)

கோங்கணர் திருமந்திர ஞானம் ௰உ.

முற்றிற்று.



மதுரை திண்டுக்கல் ரோட் பட்டாளம் பெருமாள்நாயுடு அவர்கள் குமாரர் பாலையநாயுடு அவர்களிடமிருந்த ஏட்டுப் பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை.

ஐம்பத்தாறுவது:

கோங்கணர் திருவாய் மலர்ந்தருளிய

# மெய்ஞ்ஞானம் ௰௩.

ஆமப்பா பிருதிவியின் கூத்தைத்தள்ளி
அப்பனே அப்புவதன் கூத்தைத்தள்ளி
ஏமப்பா அக்கினியின் கூத்தைத்தள்ளி
உத்தமனே வாயுவின்கூ றொக்கத்தள்ளி
சேமப்பா ஆகாசத் தஞ்சந்தள்ளி
திருந்தவே அறிவுநா மென்றேயெண்ணி
வாமப்பா அஞ்சுவகைக் காரமெல்லாம்
மக்களே நமக்கில்லை யென்றுதள்ளே. (1)

தள்ளப்பா திடமாக வூன்றிநின்று
தானேதா னாயிருந்து நாமேயென்று
அள்ளப்பா அமுதக்க வமுதந்தானாம்
அப்பனே பொசித்துநின்று சமாதிமுட்டு
விள்ளப்பா நிதமில்லை பாவமில்லை
விதியில்லை மதியில்லை விரித்துயேறு
பள்ளப்பா படிநின்ற ஜெனங்கள்போல
பலகாலந் திரியாதே பரத்திலூனே. (2)

ஊனப்பா வொன்றுமில்லை யெல்லாம்பொய்யே
உத்தமனே மனவாக்குக்காயமில்லை
தோணப்பா வெங்கோர முரைத்துநின்று
சுகமாகச் சமாட்சி ரூபந்தானும்
வீணப்பா மற்றசாஸ் திரங்களெல்லாம்
வேதாந்த சாஸ்திரத்திற் கொவ்வாதப்பா
ஆணப்பா வென்றுமில்லை யெல்லாம்நாமே
அகண்டத்தின் மகிமைசொல்ல அடங்காதென்னே. (3)

அடங்காது அடங்காது உலகமாயை
அப்பனே சொல்லுகிறேன் நன்றாய்க்கேளு
திடங்காணப் பொருந்திநின்ற பெரியோர்பாதம்
தினந்தினமும் பூசைசெய்து திருவேயென்று
செடங்காணத் திருக்கண்ட ஆகமத்திற்
சிக்கவதி லேசமத்துக் காமமத்துக்
குடம்போல விகாரமத்துக் குரோதமத்துக்
கூகூகூ லோபமத்து மோகந்தள்ளே. (4)

தள்ளப்பா மதமொடுமாச் சரியந்தானும்
சாதகமா யிரிஷையும் சூசையப்பா
விள்ளப்பா டம்பமொடு தர்ப்பந்தானும்
விதமான ஆங்காரங் கூடத்தள்ளு
கள்ளப்பா கொண்டிருந்த மயக்கம்போலே
கலந்தவிர்தப் பதிமூனுங் காலனுமே
உள்ளப்பா விதையறிந்து யெல்லாந்தள்ளி
ஒகோகோ சாத்திகத்தில் நின்றிடாயே. (5)

நின்றக்கால் பிறப்புமில்லை யிறப்புமில்லை
நேரான துயரமில்லை பாசமில்லை
மன்றப்பா நல்வினைதீ வினையுமில்லை
மகத்தான பூரணந்தான் நோக்கமாகும்
குன்றப்பா யிருந்தாலென் கிருந்தாலென்ன
கூறுகப் பதிமூனுந் தள்ளவேணும்
பன்றப்பா பழமுறையிற் சொன்னமார்க்கம்
பகுத்தறிந்து வுங்களுக்குச் சொன்னேன்பாரே. (6)

பாரப்பா பதினாலு வுலகமாச்சு
பாழான மாயையொடு கருவுமாச்சு
நேரப்பா பெண்ணாசை நிலைத்துப்போச்சு
நிதியான பொன்னாசை மூடிப்போச்சு
காரப்பா மண்ணாசை கட்டிக்கொண்டு
கலக்குதப்பா உலகமெல்லாங் கவிழ்ந்துபாரு
பேரப்பா இறவென்ற வல்லாரெல்லாம்
புகழாகப் பதிமூனும் அறப்பார்காணே. (7)

அறுப்பார்கள் வேரோடே பிடிக்கிப்போட்டு
அப்பனே நித்தியமாய் நினைவையெண்ணி
வெறுப்பார்கள் மனைவிமக்கள் சுற்றத்தார்கள்
வீடுநிதி காடுகரை விளைவையெல்லாம்
உறைப்பார்க ளறிந்துகொண்டு திடமாய்நின்று
ஓகோகோ நிராசையற்றுச் சமாதியற்று
மறைப்பார்கள் பரலோக ஆசையத்து
மகத்தான பூரணத்தைப் பருத்துப்பாரே. (8)

பருத்ததனை ஒவ்வொன்று யறிந்துதள்ளு
பாங்கான அறிவிலே தானாய்நின்றால்
வகுத்துவிட்ட கற்பனைகள் மாய்ந்துபோகும்
வளமான நாமமெல்லாம் நாமாய்த்தோன்றி
தொடுத்துநின்ற நாட்டமெல்லாம் வெளியாய்த்தோன்றுஞ்
சுத்தவெளி தானுமொரு கடுகாய்க்காணும்
சகத்திலே சகமிருக்கச் சகமில்லாப்போற்
சகத்தோன்றிக் குருவின்பா லறிவைப்பாரே. (9)

அறிவைநீ யறிந்தாலே பிறவிபோச்சு
அடுத்தாப்போற் பரமபதம் நிலையதாச்சு
குறிகுணமு மோகமத மெல்லாம்போச்சு
குறித்துநின்ற நினைவெல்லாம் கூடிப்போச்சு
ரு [illegible]றியோடே பிரமத்தில் நின்றுயானால்
நீயதுவாய்ப் பரமசகப் பிரமமாவாய்
வெறியோடே அலையாதே யனலைத்தாரு
வேதாந்தப் பூரணத்தில் அமுதமுண்ணே. (10)

உண்ணப்பா நித்தநித்தம் அறிவிலூணி
ஓகோகோ யான்வேறு தேகம்வேறு
மண்ணப்பா பிரிதிவியோ டைந்தும்வேறு
மாமாயை மாகருவி யெல்லாம்வேறு
கண்ணப்பா அறிவறிந்த கண்ணேகண்டு
கலக்காதே பார்த்தாணி கண்டுதேறு
விண்ணப்பா தானுமி நின்றுவாழ்வாய்
விடாதே விடாதே விட்டாற்போச்சே. (11)

போச்சென்று ஞானத்தை விட்டாயானால்
　　பிறப்பிறப்பு மாயைவந்து சுத்திமீறும்
நீச்சென்ற சமுசாரக் கடலில்வீழ்ந்து
　　நீயுமே புழுப்புழுவாய்ப் பொன்றிடாதே
தீச்சென்ற திரணம்போல் துரோகந்தள்ளி
　　தீராத துயரமெல்லாந் தீர்ந்துயேறு
ஆச்சென்ற அச்சணத்தி லறிந்துநில்லு
　　அப்பனே யென்மக்கா ளறிவுபோச்சே. (12)

போச்சப்பா அறிவதுதா னனைத்தும்போச்சு
　　புகழான நாமமெல்லாம் பொடியாய்ப்போச்சு
ஆச்சப்பா அண்டமெல்லாம் கடுகாய்ப்போச்சு
　　அப்பனே பூமியுட வாட்டம்போச்சு
வாச்சப்பா அனைத்துலகு மிழந்துபோச்சு
　　மகத்தான வறிவுதா னாகிநின்றால்
பாச்சப்பா மனம்நிறுத்தி தன்னைக்கான
　　பாங்கான வெட்டவெளி தோந்தங்காண்பாய். (13)

கொங்கணர் மெய்ஞ்ஞானம் ௱௩,

முற்றிற்று.



அம்மையநாயக்கனூர் சேகரம் சல்லக்குளம் சோதிடம் செ. சோ. சுப்பையாபண்டார மவர்களிடம் வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவேதுணை;

ஐம்பத்தேழாவது:

கொங்கணர் திருவாய்மலர்ந்தருளிய

# சுத்த ஞானம் ௧௬.



அரியஅரி யட்சரத்துக் கருத்தமேது
அந்தரங்கம் ஓமென்னும் அருளங்கேது
பிரியமொரு ஈமென்னும் பெருமையேது
பேச்சரிய அவ்வென்னும் போக்கமேது
உரியமொரு உவ்வென்னும் உண்மையேது
ஓங்காரரீங்கார மெழுத்தங்கேது
அரியமொரு நமசிவய அருளங்கேது
அந்தரங்க வுண்மைதனை யறிவாரரோ. (1)

செப்பினேன் மனத்தாலே தவமுமாச்சு
சோவிழ லாவதுவும் மனமேயாச்சு
ஒப்பினேன் மாய்மெல்லாம் மவுனமாச்சு
ஓகோகோ சஞ்சலத்தால் மனம்போயாச்சு
அப்புநீ ருப்பதுபோல் மனமேசென்று
அகண்டத்திற் சேர்க்குதென்று லதுதான்போதங்
கொப்புநேர் மனம்விட்டால் மவுனம்போச்சுக்
கொள்கையிந்த நூலைவிட்டால் ஞானம்போச்சே. (2)

போச்சென்று விடுகாதே மவுனமார்க்கம்
புகழ்மூல ரேகைப்புத்தி யுள்ளானென்றார்
மூச்சென்ற பிராணனும் முன்னேபண்ணு
முதிர்ந்தபின்பு செய்கின்ற முயற்சிகேளு
வாச்சுதென்றால் மூலத்தே அகாரமீசன்
மருவிநின்றால் உகாரமது சத்தியாச்சு
கூச்சென்ற இரண்டுமொன்றுக் கூடாதன்
குறியோத்த மவுனமிது கூடுகூடே. (3)

கூடப்பா மூலத்தே முந்திமுந்திக்
குறையாமற் பளிச்சென்று லிங்கங்காணும்
நீடப்பா லிங்கமது நந்திநந்தி
நேராக யெட்டிதழும் விரிந்துகாணும்
ஊடப்பா யிதையொட்டிச் சுழியினூடே
ஒகோகோ அனுகதத்தில் மவுனமொட்டு
தோடப்பா வசைந்துநின்ற மவுனத்தாலே
சோமசடை அசைந்தாட நடனம்பாரே. (4)

பாரப்பா யொட்டியாக் கினையினுள்ளே
பதறாமல் மவுனத்தைத் தாக்கிநன்றாய்
நேரப்பா சதாசிவனும் நடனஞ்செய்வார்
நிலையான சிவகாமியிருந்துபார்ப்பாள்
காரப்பா அவ்விடத்தே நித்தநித்தம்
காத்தாக்கால் அம்பலத்திற் கனிபலாகும்
சேரப்பா அதைவிட்டு அறிவின்மூலம்
சேர்ந்தேற வரிசையின்னஞ் செப்புவேனே. (5)

செப்புவே னறிவுக்கு மவுனமுன்னிச்
சேர்ந்துமவர் தேறுமட்டுந் திறமாய்நில்லு
செப்புவே னென்னவென்று லெளிதோமைந்தா
சேர்கிறதும் தவிர்கிறதும் இதுக்குட்பாரு
செப்புவே னறிவினுட மூலங்கண்டால்
தேகமது கற்பூர தேகமாச்சு
செப்புவே னிலயத்துட் சிவன்தான்வந்து
திரட்டியன்னங் கொடுக்கையிலே யுண்ணலாமே. (6)

உண்ணலா மென்றுசொல்லி யண்ணருண்டார்
ஓகோகோ நானுமந்தப் படியேயுண்டேன்
அண்ணலார் நாயனந்தப் படியேயுண்டார்
ஆச்சரியம் ஐஞ்னூற்றெண் பத்தேழ்வார்சு
கண்ணலாம் மனம்படைத்த மாணாகேளாய்க்
கரையேறப் போவதெப்போ கலந்துநீங்கள்
விண்ணெலாம் ஒளிவாச்சு உலாவலாச்சு
விரைந்தோர்க்கு மவுனமென்ற யேணிதானே. (7)

தாமென்ற யெளிவித்தை பத்தாய்த்திட்சை
சாதகமா யுலகத்தோர் காணார்காணார்
பாமென்ற மனதையும்பார் பூசைசெய்வார்
பலபலவாய் மந்திரத்தைச் செபிப்பார்பாவி
கோமென்ற குருக்காணார் பொருளுங்காணார்
குவிந்தவிடஞ் சகங்காணார் குருட்டுவாமி
வாமென்ற விடமெல்லா வாமயிடம்
வாக்கையிலே யானந்த மறிவித்தேனே. (8)

அறிவாய தேதென்னில் மைந்தாகேளு
ஆருமல்ல ஆருமல்ல ஆத்தாளாத்தாள்
பிரிவாக வனுகடந்தா லகண்டமப்பன்.
பெயரென்ன சொல்வேனுன் பேணிக்கூடு
அறிவாகக் கூடாட்டால் வாதசித்திக்
கலைந்தல்லோ வெகுசனங்கள் மலைந்துபோனார்
தெரியாகச் சொல்லிவைத்தேன் காண்டந்தோறும்
கோனை காட்சியிலே மவுனந்தானே. (9)

மவுனமுன்னை மவுனமுன்னை மவுனமொன்று
மகத்தான பூரணந்தான் சொல்லக்கேளு
மவுனமுன்னை மவுனமுன்னை மவுனமாகும்
மாசற்ற மவுனமது வந்துதோன்றும்
மவுனமுன்னை மவுனமுன்னை மவுனந்தோன்றும்
வளமான ஞானமுத்தி வழியுங்கண்டு
மவுனமுன்னை வரிசைபது மக்காள்கேளு
வாய்மூடி வாங்கிநிற்கும் மவுனக்காணே. (10)

காணப்பா மவுனத்தி லடைந்தபேர்கள்
கைக்கெட்டாத் தீபம்போ லொளியாய்க்காணும்
பூணப்பா அறிவினுள்ளே யடைந்தபேர்கள்
புகழான ரவிபோலே கோடாகோடி
நுணப்பா வண்டகத்தி லடைந்தபேர்கள்
ஒருகோடி ரவிமதியும் வன்னிபோலாம்
தோணப்பா தோன்றும்சா தாக்கள்சோதி
சொற்பெரிய பூரணத்தின் சோதிதானே. (11)

நீர்னென்ற பூரணஞ்சோ தியைத்தான்நோக்கச்
சமாதியுள்ளே யிருந்துரைத்த பலத்தினாலே
வானென்ற வெளியாம்நா தாக்கள்காந்தி
வாய்திறந்து சொல்லாத ரகசியந்தான்
கோனென்ற வென்னையீன்ற நாதன்சொன்னார்
குலாவியந்தப் படிசென்று யானுங்கண்டேன்
ஊனென்ற உடம்பெடுத்த மாணாக்காகேள்
உன்னியுன்னி யுரைத்துநித்த மோங்கிடீரே. (12)

ஓங்கிடீ ரோங்கிடீர் மவுனம்பூட்டி
ஓகோகோ தேகமுந்திரோ தாயிற்றில்லை
தேங்கிடீர் தேங்கிடீர் மவுனமுன்னாச்
சித்தியில்லை சத்தியில்லை சேரவொன்றாய்
வாங்கிடீர் வாங்கிடீர் கெவுனவீதி
மாசற்ற வொளிதோறும் நாதங்கேட்டுப்
தூங்கிடீர் தூங்கிடீர் நாதத்துள்ளே
சுத்தசை தன்யத்தின் தூக்கங்காணே. (13)



சாணப்பா யிதையொட்டி யோகம்பார்த்துக்
கரையேற்ற சமுத்திரத்தின் தவளைபோலப்
பூணப்பா யிதைவிட்டு ஞானம்பார்த்தால்
புனிதனே மனக்குரங்கு யிழுத்துச்சன்றும்
தோணப்பா வதினாலே காண்டடங்தோறும்
சொல்லிவந்தேன் சொல்லிவந்தேன் மவுனமொன்று
தூணப்பா துரும்பாகும் மவுனயோகம்
சூட்சத்தை யறியாட்டால் ஞானம்போச்சே. (14)

போச்சென்று போகாம லடியேன்சொன்னேன்
புகழுற்ற பெரியோரே கோபம்வேண்டாம்
ஆச்சென்று முதற்காண்ட மடியேன்சொன்னேன்
அரும்பொருளே தப்புகினும் அடிமைமேலே,
மாச்சென்று கோபம்வந்தால் மைந்தாவென்று
மகத்தான கருணையினால் மாற்றுமாற்று
ஓச்சென்று யின்றாலா லுரைத்ததர்மம்
ஓங்கியதோர் மனிதருக்குக் குருவுமாச்சே. (15)

குருபதத்தைப் போற்றியிரு பதியிலொன்றிக்
கூறுன பதியிலேழு வரையும்போற்றிக்
கருவுரைத்த சித்தர்களைத் நினைந்துதித்துக்
கரைகண்ட பெரியோர்கள் பதம்பணிந்து
திருவுரைத்த இந்நூலைப் பார்த்தோரெல்லாம்
சிவயோகத் தவதேக சித்தியாகிப்
பரவுகின்ற காளில்பரா பரமுமாவார்
பாடியதோர் முதற்காண்டப் பாவுமுற்றே. (16)

கொங்கணர் சுத்த ஞானம் ௰௬
முற்றிற்று.



மதுரை வடக்குமாசி வீதியிலிருக்கும் பாத்திர வியாபாரம்
க. ரா. ம. கணபதிபிள்ளை யவர்களிடமிருந்த ;ஏட்டுப் பிரதியின்படி
இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குமரன் றுணே.

ஐம்பத்தெட்டாவது
கோங்கணர் திருவாய் மலர்ந்தருளிய

# உற்பத்தி ஞானம் உக.

ஒன்றான கயிலைபரம் பரையில்வந்தே
உதித்ததிரு மூலர்குரு பதத்தைப்போற்றி
நன்றான காலாங்கி பாதம்போற்றி
நலமுற்ற போகர்திருப் பாதம்போற்றி
கன்றான கடம்செனித்த விந்தை சொல்வேன்
கருதிக்கேள் காரணத்தைக் கருணனந்தா
தொன்றான பிருதிவியாம் நாதத்துள்ளே
தோன்றுஞ்சுக் கிலமாகுஞ் சலந்தான்கேளே. (1)

கேளப்பா ஆன்மாவாம் வாய்வுகூடிக்
கெடியான சித்தவா காசம்பொங்கி
வேளப்பா ஆங்காரஞ் சிகாரமிஞ்சி
மேவுதற்குப் பெண்மேலே மோகமாகும்
நாளப்பா அஞ்சுக்கும் பலமேதென்றால்
நலம்பெறவே சொல்லுகிறேன் நன்றாய்க்கேளு
தாளப்பா மனத்தோடே பிராணன்கூடும்
தனியான பிராணத்தி லபானன்றானே. (2)

தானென்ற விந்துவிலே சமானன்கூடும்
தனியான சித்தத்தில் வியானன்கூடும்
கானென்ற ஆங்கார கெர்ச்சிப்போடே
கலந்துநிற்கும் உதானனப்பா கண்டுகொள்ளு
வேனென்ற பத்துமொன்றாய் மனதிற்கூடி
மேவியவன் கலந்துவிந்து விடும்போதப்பா
மானென்ற மவுனபர வசமேயாவான்
மருவியதோர் பெண்ணுக்கிம் முறைதான்காணே. (3)

முறையாகப் பெண்ணூறும் மவுனமுற்றால்
மோசமில்லை கெர்ப்பமக்கே தரிக்கும்பாரு
நிறையாக வலத்தோடில் ஆணேயாகும்
நேராக இடத்தோடிற் பெண்ணே யாகும்
குறையாகச் சுக்கிலக்கெற் பத்திற்பாயில்
குணமான சுரோணிதத்தான் கருண்டுகொள்ளும்
கறையாகப் பாக்கவெளி தமரும்போலக்
களக்கொடிக்காய் போற்றிரண்டு சிரசமாமே. (4)

ஆமப்பா சிரசோடே கையுங்காலும்
அப்பனே தத்துவங்கள் நரம்புச்சென்மம்
ஓமப்பா அஸ்திமுதல் ரோமத்தோடு
உத்தமனே பதினொன்று வாசல்காணும்
காமப்பா விழுந்தவழி சிசுகினோடே
கைமுறைதா யுண்டஅன்ன நீரேசெல்லும்
சேமப்பா கடுமையத் தொப்புளோடே
சென்றதெல்லாம் மலமாகக் கக்குந்தானே. (5)

தானென்ற பதினொன்றுச் சடந்தான்முன்னே
சாதகமாய்த் தொடுத்துவரும் மலடெவ்வாறு
ஊனென்ற பெண்ணுக்கு மனதுவேறாய்
உருக்கமுற்ற மவுனமுன்னுப் பாவத்தாலே
காமென்ற மலடாவாள் புருடனுக்குக்
கைமுறைதா னிவ்வகைநீ கண்டுகொள்ளு
தேனென்ற மொழியுடைய வாலைசொன்னாள்
சேகமெல்லா மிப்படியே செனித்தவாறே. (6)

வாறான மவுனமென்ன மனத்தாயப்பா
மருவியதோ ரிஷ்டங்கா விராட்டனென்றும்
தாறான சடமாச்சு அண்டமாச்சு
சாதகமாய் புவனமொடு பதமுமாச்சு
கூறான வுன்மனத்தாய் ஆடுக்கூத்து
கொள்ளியிவள் வரைக்குமைந்தாய்ப் பிறப்பிறப்பும்
மாறான தைக்கடந்தால் வாமபோதம்
மைந்தனே பனிரண்டாம் வரையிதாமே. (7)

வரைகண்டு சுகித்தவனே ஞானமூர்த்தி
மகத்தான அம்மகத்தான் சீவன்முத்தன்
நிரைகண்டு மனைலகிக்கச் சொன்னயோகி
நேரான யோகத்திற் கிரியையோர்கள்
நிரைகண்டு விராட்டன்மீழ் சரியையோர்கள்
செப்புகிறேன் நினங்கிழே விவேகத்தோர்கள்
அரைகண்டு அறுவரையின் மேலேசாய்ப்பாய்
அஞ்சுவரைக் குள்ளதுவும் மனுஷர்தானே. (8)

தானென்ற நால்வரையிற் காட்டில்வாழ்வோர்
தனித்தமூன் றுக்குள்மிரு கங்களாகும்
கானென்ற இரண்டுக்குள் பட்சிசென்மம்
கலந்தொன்றுள் ஊர்வனந்தா பரமுமாகும்
தேனென்ற உமைகேட்க யீசன்சொன்னார்
செகமெல்லாம் பதினொன்றும் வரையிலொன்றும்
பானென்ற பன்னிரண்டே அறிவார்போதம்
பரிவான வுற்பனத்தைப் பகர்ந்துகாணே. (9)

காணப்பா மேல்தொடுத்துக் கீழ்வாய்சொன்னேன்
கைமுறையாம் பிண்டத்தி லாறுதலஞ்சத்தி
பூணப்பா அண்டத்திப் படியேகாணும்
புகழான புவனத்திப் படியேகாணும்
ஊணப்பா பாதமிப் படியேகாணும்
உற்பனந்தா னுன்மனதாய் உயர்ந்தகூத்து
தோணப்பா யிதுகடந்தா லறிவாம்போதம்
சுருக்குமெத்தச் சுருக்குமெத்தச் சொல்லுவேனே. (10)

சொல்லுகிறேன் மனங்கடந்து அறிவிற்சேர
சொற்பனமென் பாரையோ மக்காள்மக்காள்
மல்லுகிறேன் மலைகளிலே சுருக்குமாகில்
வரிசையாய்த் தேடென்னைப் பூட்டிக்கூடில்
செல்லுகிறே னென்றுபெரு விரலையூனிச்
செல்லையிலே விழுந்துமன்ற நிரமதொக்கும்
வெல்லுகிறேன் ஏறவா சனைகீழ்நோக்க
வேடிக்கை மெத்தவங்கே விரைந்துகூடே. (11)

கூடரிது சுந்தரா னந்தாகேளு
கூடினர் கொள்ளையிட்டா ரகண்டவீதி
ஆடரிது யென்றுசொன்னீர் கண்டமூர்த்தி
அடியேன்க ளேறுதற்கெப் படிநீர்சொல்லும்
மூடரிது உலகத்தோர் ஞானம்பார்த்தால்
முன்பிறவி தன்பிறவி யென்றுந்தோனுச்
சூடரிது வாமியென்றால் வஸ்துகல்ப்பம்
சுகமாகக் கொண்டுசித்தம் அறிவான்பாரே. (12)

பாரப்பா வாமியென்றால் அறிவில்வாழ்வார்
பாக்கான சித்தனென்று லகண்டஞ்சேர்வார்
நேரப்பா யிருந்துரைத்துக் கண்டபேர்கள்
நிசமுமொரு அகண்டவரை தழுவுவார்கள்
காரப்பா குளிகையிட்டு அகண்டவீதி
காத்துரைத்த அகண்டவரை காணுங்காணும்
தேரப்பா சொன்னேனிஞ் ஞாறுபேர்க்குச்
சேர்ந்தமுதற் சிவனுட முத்திகேளே. (13)

கேளப்பா நாதாக்கள் சமாதிவிட்டு
கெடியாக நடக்கையிலே பூமிமுதற்புற்கள்
தாளப்பா பட்டுடன்நற் சென்மமாகும்
சாதகமாய்ச் சாய்ந்தமரம் கிரியையாகும்
நீளப்பா பழக்கொடுத்த மரந்தான்யோகி
நோகப் பட்சியொடு மிருகமெல்லாம்
ஆளப்பா அர்ச்சனைநா தாக்கள்கொண்டால்
ஆகாரம் மனோன்மணியை அடுக்குந்தானே. (14)

தானென்ற பரமறியான் மிலேச்சரெல்லாம்
சாதகமாய் கெவுனிக்குக் கவளமிய்ந்தால்
வானென்ற வெளிகடந்து அறிவிற்சேர
மறுஜென்மம் எடுத்துமுத்தி சேரும்சேரும்
காணென்ற கிரியைதிரி சென்மம்யோகி
கைமுறையாய் மூன்றுசென்மம் யோகந்தாண்டி
கோனென்ற ஞானத்திற் கொழுந்துவார்கள்
குறிப்பான பதினென்று வரைசொன்னேனே. (15)

சொன்னதொரு யோகமொடு ஞானமார்க்கம்
சூட்சமெல்லாஞ் சொல்லுகிறேன் சுந்தராகேள்
பன்னதொரு சடத்தினுள்ளே மூலந்தொட்டு
பகுந்தாறு சக்கரத்தைப் பார்த்துயோகி
கன்னதொரு மதியமுத முண்டுதேங்கி
கலந்துநின்ற மயக்கத்தை ஞானமென்பார்
என்னவினி யென்னிலிது வல்லமைந்தா
இதன்மேலே மனதுக்கு ஆறுதலங்கேளே. (16)

கேளப்பா புருவமையம் மதியின்வீடு
கெடியான சகஸ்திரந்தான் விந்துமூலம்
ஆளப்பா தலைமேல்நா தாக்கள்காந்தி
அவ்வளவும் மனதுக்கு ஆறுதலமாச்சு
நீளப்பா அதின்மேலே அறிவின்மூலம்
நேராக வெளியொன்று ஒளிதானென்று
சூளப்பா காந்தியொன்று ரவிதானென்று
சொல்லடங்கா நாதமென்ற சொரூபியொன்றே. (17)

ஒன்ருன சொரூபத்தில் மூலங்கேளு
உற்றமதி கோடியைப்போற் காந்திகாணும்
தோன்ருன கனல்கோடி போலாம்ரெண்டு
சொன்முறையாம் ரவிகோடி போலாம்மூன்று
நன்ருன மூன்றுமொன்ருய்க் கூடிப்போனல்
நலமாகக் காணுமப்பா நாலாம்வீதி
பன்ருன அஞ்சேது நாதவொலிசொல்லப்
பார்த்துழன்றேன் பார்த்துழன்றேன் திரும்பினேனே.(18)

திரும்பினேன் அப்புறந்தானேதோயேதோ
சிவன்சொல்லுஞ் சாஸ்திரத்தி லெங்குங்காணேன்
விரும்பினே னகண்டத்திற் சொக்கினோர்கள்
மேன்மையாம் சமாதிவிட்டுப் பசித்துதானல்
இரும்புநேர் சுயம்பான லிங்கந்தோரும்
ஏத்துமப்பா பெலியிட்டு எந்தன்மக்காள்
அரும்புநேர் சொரூபனைம் பதுபேரப்பா
அறியாத பிள்ளைகள்தான் மத்தோர்காணேன். (19)

மத்தாக இருக்கிறதோர் பிள்ளைகட்கு
        வருத்திவிப்பிர் வருத்தாட்டால் மெத்தக்கொஞ்சம்
சித்தாக வமசித்தி ஞானசித்தி
        தேகத்திற் காந்திவரக் காயசித்தி
முத்தாகக் குளிகையிட்டுக் கெவனசித்தி
        முத்தலத்தி லானந்தங் கண்டுதாண்டி
ஒத்தாகப் பூரணத்திற்(சிலம்) பொலியைக்காண
        ஒருவருக்கு மிடர்வாரா தின்னிந்தானே. (20)

தாமென்று சீர்க்குருவாம் போகநாதர்
        சாதகமாய்ப் பொருளுக்கு உப்பேயென்றார்
கோமென்று அதைத்தொட்டு மூன்றுகாண்டம்
        கூடுகிற மெய்ஞ்ஞான மவுனஞ்சொன்னேன்
வாமென்று கடந்தசிலம் பொலியைப்புக்கி
        வக்கிபக்கே மாறிவந்தேன் மக்காள்மக்காள்
பாமென்று ரவிகோடி காந்தியான
        பரமகுரு மூலர்பதம் பணிந்தேன்முற்றே. (21)

கொங்கணர் உற்பத்தி ஞானம் உக,
முற்றிற்று.



ஸ்ரீவில்லிபுத்தூரைச்சேர்ந்த தென்கரை வடகரை கோட்டைப்பட்டி காட்டன்னமை நல்லமநாயுடு அவர்கள் குமாரர் முத்துசாமிநாயுடு அவர்களிடம் வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

பரமபதிதுணை.

ஐம்பத்தொன்பதாவது:

கோங்கணர் திருவாய்மலர்ந்தருளிய

# ஞான வெண்பா சக.



வெண்பா.

பொங்கு மருள்ஞானம் போதிக்குங் கொங்கணர்தான்
தங்கியசித் தாந்தத்தை தானுரைக்க—எங்குமுற்ற
தம்பத் தடிவாலைத் தாயருளு மோங்காரக்
கம்பத் தடியானே காப்பு. (1)

எட்டவற்கு மெட்டாது வெண்காலுங்கிட்டாது
வட்ட மதிக்கெதிராய் வாராது—விட்டவெட்டு
வாச லடைத்துவெளி மத்திபத்தி லேயிருக்கு
மீசனடி பெற்றார்க் கிது. (2)

காலைப் பிடித்திருந்து கந்தரத்தில் மந்திரத்தை
யோலமிட் டேதினமு மூதினுற்—பாலைப்
புசிக்கலாந் தேகமது போகாம லென்றும்
வசிக்கலாங் காணு வகை. (3)

உள்ளே முளைத்த உயர்ந்த பனையூறுங்
கள்ளே பொசித்திருக்கக் காயாதே—வெள்ளம்
வருமு னணைகோத மாட்டாத பேர்க்குக்
கருவுருவு மில்லையே காண். (4)

கொல்ல னுலைமேலே கூத்தாடி தன்மேலே
யில்லனது மேலே யிருக்கிறான்—பொல்லாத
நாக்கை யடக்கி நவிலும் படியறிந்தா
லாக்கை யழியா தது. (5)

ஆரவா ரத்தைப்பிடித் தாடு மயிலைத்
தாவாரத் தாவித் தரிக்க—விர்வுமருந்
தஞ்சாவூர்க் கோபுரத்தைத் தான்சமைத்த வாசாரி
நெஞ்சில் நினைந்தெக்கால் நில். (6)

விடுமவ னாகும் வெளியு மவனாகும்
ஓடப் பிடிக்கவவ னெட்டானே—தேடும்
பதிக்கு மவன்பாசம் பற்றறுப்பார் தங்கள்
கெதிக்குமவ னாகுமே கேள். (7)

கூட்டிற் கருக்குருவி கொம்பிற் குதித்தேறி
மூட்டிவிடக் காலை முடக்கினால்—ஆட்டியதோர்
சக்கரமு மேபெய்துந் தன்னையுந் தானறிவன்
இக்கிரகஞ் சித்தி யிதை. (8)

தென்னமரத் தாச்சியிலே தேங்கா யிருக்கிறதே
என்னமாய் வந்தமைக் கெய்துமோ—கன்னமிடுங்
கள்ளருட னேதோட்டக் காரருமே யொன்றானால்
தன்றுவா ரிங்கிவையுணர்த் தான். (9)

ஐவர் சகாயன்வி டார்க்கு முபகாரி
எப்பான் சமுத்திரைக்கே யெய்துவான்—மெய்தான்
படைப்பவனார் செல்வம் படைப்பவனா ரெக்கும்
படைப்புத் திறப்பு மவன். (10)

சோகத்தைக் குன்னே திறந்தடைத்த வாசமணி
பூரகத்தே பெயருக்கப் பூரகமாம்—ரேசகக்
கும்பித்து ரேசித்துக் கொள்ளும் படியறிந்தால்
தம்பிக்கு மேமறியத் தான். (11)

ஈசான்றன் கீழே யிருந்தாக்காற் கண்கடுடி
மீசைமாந் செஞ்சடையின் மேவியது—மேசைத்தில்
தட்டாமெனம் பிட்டான் தலைக்குத்தான் கிழுறுந்தி
விட்டிடுவ ரன்பான் வெளி. (12)

பார்கண்டார் கண்டார்கள் பாணியின்பூ மாமலரின்
தார்கண்டா கண்டாரு தன்பணியை—செறிவ

சூத்திரத்தைப் பார்த்துத் துறைகாண வல்லார்க்கு
வீத்திருக்சுத் தோறும் வெளி. (13)

நஞ்சுண்ட செட்டிமகன் னன்றாய் நடுக்கடலில்
அஞ்சுமொரு பத்திலே யாபாரம்--மிஞ்சவொட்டான்
பக்கம் கொடுத்த படிப்படியே வாங்குவான்
செக்கான் முதலுக்குக் செல்.  (14)

ஆமை கிணற்றி லணில்நுனியின் கொப்பிலே
ஊமை யதைப்பிடிக்க ஒட்டானே—சாமை
யமையாது காத்துறுதி யார்க்குமரி தாகுந்
தமையறிந்தா லொன்றுமிது தான். (15)

வட்ட வெழுத்துவர வாங்கியதை நெட்டெழுத்து
அட்டமா சித்தியுமுன் டாடுதே—நட்ட
நடுவி லொருந்துருவ ராஜ னிருந்து
கடலையு மொப்பிவிப்பான் காண். (16)

இடுப்புக்கு மேலே யெழுந்தலைக்குங் கீழே
முடுப்பிடத்தில் நீரையதி லேத்தூ—தொடுத்திட்ட
காலையதில் மாட்டிவிட்டிக் கைமேற் பலன்தோற்றும்
மேலவராய்த் தேடும் விதம். (17)

அத்திக்கு முன்பாக அத்திக்கும் பின்பாக
மத்திபத்திற் குண்டுமணி வாழுதே—சித்திபெறத்
திங்களுக்கோர் பூவைச் சிவனுக்கே யர்ச்சித்தா
லங்க மழியா தது. (18)

வில்லங்க நாணிடைபின் வேதாவி னட்சரத்தாற்
கொல்லங்கே வந்திருந்த கூற்றுவனை—நில்லதிலே
ஆனைகட்டத் தானும் அதுவே கெதியாக
வானமுட்டப் போராய் வரும். (19)

போகுதே யோர்கடகம் போனாலுந் தள்ளுகடை
யாகுதே நாலு மழிக்குதே—யேகாமற்
கேசாத்தின் கால்நடுவங் கேறத்திறமறிந்து
பேசினுற் றேகம் பெலன். (20)

கடதலையிற் சென்றுநிதங் கையாடி வந்தால்
இடபிங் கலையு மிறங்கா—துடையிலே
யெட்டு மிரண்டு மிலிங்கமது தானுற்
கட்டுமே தேகமது காண். (21)

விளிப்பங்கே தூக்கமது மேவுவது மங்கே
களிப்பங்கே காமக் களிவா—யளிக்க
விருந்தவு மங்கேதா னேகமாய் நின்று
பொருந்துவது மங்கே புகல். (22)

தண்ணீர்வி லாங்கு தலைகாட்டும் பாம்புக்கு
விண்ணிலே வால்காட்டும் மீனுக்கு—கண்ணியே
வஞ்சகமே செய்வான் வருங்கருவிக் கூட்டுக்கு
ளஞ்சிர வாணி யது. (23)

ஆயன் பசுவை யழைக்கவது போய்மீண்டு
மேய்வதுபோன் மேனி விலாபயிரை—வாயாலே
சொல்லரப் பொருளைத் துறித்தின்று போகாது
கல்லாவின் பால்தருமே காண். (24)

இடத்தி லிருந்துமே யேத்துவலப் பாகம்
கடத்தைபிது பார்க்க னரையா—மடத்திலே
ஆண்டியுந் தாதனு மாகவிரண் டொன்றுற்
றுண்டும் பரிவாரது தான். (25)

பூவி லினமை புனலிலி ரெட்டாகும்
மேவுகனல் மின்கால் வெளியாகும்—தாவிய
வானும் புகையாகும் மண்டலங்க ளொன்றுகுந்
தானமறி வார்க்குமது தான். (26)

கன்னி துலாத்திலிடை காண்பதாற் கற்கடகம்
உன்னு மிடபத் தரமேஷம்—பொன்னின்
வடமாம் விருட்சிகத்தின் வாள்மகரங் கும்பத்
திடமாந் தனுவழியா தே. (27)

துடையடியில் மண்ணைதனைத் தோண்டிவெளி புக்கா
அடைபிடர் பொத்த லறிந்து—புடையார்

பருத்தி தனைத்தின்று பாழாகுதே யுன்
துருத்திபார்த் தூது சுகம். (28)

கட்டாக் குதிரைபெருங் காயக் கடைவழியே
யெட்டுடனே நாலுமா யேகுதே--பொட்டெனவே
ஓடி மறியடா உள்ளே வரவாசி
நாடியதி லேற நலம். (29)

வாய்பிளக்க ரெண்டுமொரு மாவிற் பிளந்தேறி
ஓயாக் குதிரையதி லுண்டாச்சே—சாயாமல்
ஆயக்கால் பத்து அடக்கமதில் நாலுந்
தேயக்கா லக்கால் திறம். (30)

நாட்டு முயலுக்கு நாலுக்கால் நான்பிடித்த
மோட்டு முயலுக்கு மூன்றேகால்—மோட்டுமுயல்
முக்கால் முயலும் முழுமுயலே யானுக்கால்
அக்கால் வெளியா மது. (31)

மாதாபி தாவாகி வந்தகுரு தெய்வமுமாய்
நாதாந்த விந்து நடுவாகி—வேதாவின்
ரெண்டை நடுவிருத்தி ரெண்டின்மே லாகவைத்துக்
கொண்டேதக் காணுங் குறிப்பு. (32)

குசவன்மீ காமனையுங் கொல்லாமற் கொல்லப்
புசபலமேற் காற்சூலம் பூட்டி—அசைவான்
உருக்குளியைக் காட்டி யுயிர்வாங்கு மையன்
கருக்குளியில் மீட்டிடுவான் காண். (33)

விண்டவனுங் கண்டிலான் மேலாம் பதத்திருந்து
கண்டவனும் விண்டதுவுங் காணேனே—துண்ட
மதியிலுறு மேலோர வட்டமா மண்டபமோ
துதிசெய் தவனுரைேன் சொல். (34)

ஆட்டித் திரிந்தலைந்து அஞ்சு பணங்கொடுத்தாற்
காட்டினேன் ரெண்டு கழிவாச்சு—வீட்டில்
அழியாமல் வைத்த அவமுப் பணமும்
வெளியாகப் போச்சுதே மெய். (35)

அஞ்சக்குள் ரெண்டை யகந்தார் பெரியோர்கள்
அஞ்சக்குள் ரெண்டை யகற்றினால்—அஞ்சக்குட்
காற்றைப் பிடித்துக் கரகத்தி னுள்ளிருத்தி
பேற்றினாற் சித்தா மிது. (36)

நாக்குயிர் மண்ணைத் துரியாதி தம்மதிலே
தாக்குயிர் காற்சோதி தான்காணும்—நோக்கவுமே
ஒட்டா திருபாம்பை யோர்தலையாய் நிறுப்பி
வீட்டாட்டிற் சித்தாய் விடும். (37)

கேட்டையோ மூலங் கிளர்த்திநின்ற சோதியதைப்
பூட்டிவிடும் உத்திரத்தைப் போரூறு—காட்டுமது
சித்திரைக்கு மேயனுஷஞ் சேரா திரையிலையே
முத்திக் கதிபதியே முன். (38)

ஆனி பிருத்துவாய் ஆடிக்குங் கிழாக
வாவிபிரட் டாசி வரவைக்கும்—ஊனிசிட்ட
மாசிக்குந் தைகாலம் மார்கழியைக் கூனிவை
காசியே சித்திரைக்குங் காண். (39)

திருத்துவாய் ஞாயிறுடன் திங்களையு மொன்றாய்
இருத்துவாய் செவ்வா யிருக்கும்—பொருந்த
புதனுக்கு நேர்வியாழம் புக்குமே வெள்ளி
பதனுஞ் சனியுமதி பார். (40)

தசமி நவமியாய்ச் சாரேகா தேசி
வசமாய்த் துதிகை வருமே—நிசமாகப்
பஞ்சமி சஷ்டியும் பாரட் டமியோகக்
கஞ்சஞ் சதுர்த்தியுமே கார். (41)

திங்க டனிராது தின்டியபின் மோசனமாம்
பொக்குமதா கிரிலே போய்மூழ்குஞ்—சங்குமுகத்
தீர்த்தமா டச்சகிர்தம் சென்மஞ்சா பல்லியமாம்
தீர்த்தா வழிவு நிசம். (42)

நாயமார் சொன்ன நடத்தை யறியாமற்
காயம் பலசரக்காற் கட்டுமோ—தாயிருந்த

வீடு பிடிங்கி வெளிசேர்த்துக் கொள்வார்க்கு
கூடப் பரமாகுங் கூர். (43)

கண்டத்தின் மேலாக் கபாலத்தின் கீழாகத்
துண்டத்தின் மேலாய்த் துலங்குதே—மண்டபத்தில்
வட்டமதி தானும் வயசு கழியாது
அட்டமா சித்து மது. (44)

சுத்தி வருமதியைச் சூரியனுக் குள்ளிருத்தி
நித்தியமும் வந்து நிறுத்தினால்—முத்திதருங்
காம்போதி ராகங் கலைகற்ற வல்லோர்கள்
சாம்பவியுங் காண்பார்க டான். (45)

சித்தா சனத்திற் சிவலிங்கம் போலிருந்து
வொத்த பொருளை யுணர்வீராய்ச்—சத்தம்
பிறந்திடத்தே நோக்குமே பேரின்ப வீட்டிற்
றுறந்தரியஞ் செய்யுந் தொழில். (46)

அன்ன மரையாகும் அப்புக்கால் முன்னாகப்
பொன்னம் பலந்தனிலே போயிருக்கச்—சொன்ன
வுடலை யிருத்தி யுயிரை வருத்தக்
கடல் சுவரும் நந்திவருங் காண். (47)

தள்ளு மபானந் தாக்குஞ் சமரந்நாள்
கொள்ளுந் துரியக் குரிசிலே—விள்ளரிதாம்
எத்தாப் பிழைக்கவே யெய்தாதொருவருக்கும்
ஒத்தாற் பிழைக்க வரும். (48)

கூட்ட மனுகாதே கோதயரைச் சேராதே
நாட்டம் நிறுத்தி நடுவணையில்—ஆட்டமது
அகார உகார மனைத்து முடலான
சிகார பதியே சிவம். (49)

கொங்கணர் ஞான வெண்பா சகூ,
முற்றிற்று.

---

மதுரை திண்டுக்கல்ரோட் பாலையநாயுடு அவர்கள் குமாரர் ராம தாசு நாயுடு அவர்கள் வேட்டுப்பிரதியின்படி அச்சிடலானது.



உ

கடவுள் துணை.

அறுபதாவது:

கொங்கணர் திருவாய்மலர்ந்தருளிய

# ஞான சைதன்யம் ௱௰௯.

## காப்பு.

நேரிசை வெண்பா.

உற்ற பொருளை யொருநூலாய்ச் செய்வதற்குக்
கற்பகத்தின் மூளிகையைக் காப்பென்றிங்—குற்றவர்கள்
பாதமலர் மேற்கொண்டு பாடவொரு பாடுகுரு
நாதனிரு தாளதனை நாடு.

அகண்ட பராபர மான மூலநாத
  னடிதொழுது காலாங்கி பாதம்போற்றி
புகன்றுநின்ற போகருட பாதம்போற்றி
  புகழ்பெரிய வல்லோர்கள் பாதம்போற்றி
நகன்றுநின்ற சரிதையொடு கிரியையோகந்
  தனிப்பெரிய ஞானமொடு நாலுஞ்சொல்வேன்
நிகன்றுநின்ற படிசொல்ல வென்னாற்கூடா
  கோரண பூரணந்தான் சேர்ந்தகாப்பே. (1)

அப்பனே தத்துவத்தைப் பிரித்து நன்றாய்
  ஊளையத்தாய்க் கண்டித்து வறியச்சொல்வேன்
அப்பனே தத்துவந்தான் பிறந்துநின்ற
  ஆதிமுத லந்தம்வரை தெரியச்சொல்வேன்
அப்பனே சித்தாந்தம் வேதாந்தம் ரெண்டாய்
  அறிகிறநோர் தத்துவத்தை வகுத்துச்சொல்வேன்
அப்பனே அஷ்டாங்க முடிவைச் சொல்வேன்
  அலையாமல் காற்பதமும் அறிவிப்பேனே. (2)

அறியவென்றால் வெகுபோக்கு தத்துவமாங்குப்பை
அதையகற்றி உபதேடத்தி னர்த்தம்பார்த்து
பிரியவென்று லொன்றான வஸ்துக்குள்ளே
பிறந்ததென்ன விரிந்ததென்ன பிரித்துப்பார்த்து
செறியவென்ற ஆன்மாதா னென்றுகாண
நேராக சாங்கியத்தை அறியவேணும்
தெரியநின்ற சாங்கியத்தை யறிந்தபின்பு
தேகமென்ற சோதனையை யறிந்துபாரே. (3)

பாரப்பா தேகமென்ற சோதனையைக்கண்டால்
பரிவான சீவனொடு ஈசுரனுமாயை
நேரப்பா யிதுமூன்றுந் தெரிந்துபோகும்
நேராகத் தெரிந்தான்மா வதுநானென்று
காரப்பா வேறுநினை வெல்லாம்போக்கிக்
கைமுறையா யனுபோகம் பண்ணப்பண்ண
சாரப்பா ஆன்மாவைப் போலேயாவாய்
தலைவனையுந் தன்னையுந்தா னறியலாமே. (4)

அறிந்தபின்பு ஆன்மாவிற் பிறந்தமாயை
அறிவுடைய சொரூபமென்ற ஒளியினுள்ளே
பிரிந்துநின்ற பிரதிவிம்பமீ சுரனுமாச்சுப்
பேரான வீசுரனி லொளிவுண்டாகி
வறிந்துநின்ற சீவனுமா யையோடீசன்
மருவியதோர் சீவன்முதற் சடமென்பார்கள்
தெரிந்துமது வேதென்றாற் பிரபஞ்சமாகி
சேரவிர்த்தி இதில்லயமுஞ் சேர்ந்தவாறே. (5)

வாறாக மூன்றுவித மாகநின்று
மருவியந்த மூன்றுக்கும் பிலமேதென்றால்
தாறான ஆன்மாவின் சன்னதிபெலத்தால்
தனிமாயைக் கித்தனைதான் பலமுமாச்சுக்
கூறான மாயையுட பிரகாசமீசன்
கொடியதொரு சீவனுச் சகலமாகி
ஆறாகி யல்லாதாய்ப் பிரபஞ்சமாகி
அப்பனே ஆதிசத்தி விளங்குந்தானே. (6)

தானென்ற சத்தியிலா காயந்தோன்றி
தனிவானில் வாவுவென்ற காலுந்தோன்றி
கோனென்ற வாயுவிலே வன்னிதோன்றிக்
கொடுந்தீயிற் சலந்தோன்றி சலத்திலுள்ளே
காலென்ற பிருதிவியென் காமமாச்சு
கலந்திந்த வைம்பூதக் கூத்தைக்கேளு
ஆமென்ற ஊரையந்தா யிருபத்தைந்தாய்
அறைகிறே னிந்தையுந்தா னறைகிறேனே. (7)

அறைகிறே னையைந்தாய்த் தேகமாச்சு
அப்பனே யித்தேக மெப்படிதானென்றால்
நிறைகிறேன் தேகத்தின் நிண்ணயத்தைக்கேளு
நேராகச் சொல்லுகிறே னுபாயமெல்லாம்!
முறைகிறேன் ஞானுறவர் மறிவுக்கப்பால்
முதிர்ந்தறிவுஞ் சமானத்தில் மனதுண்டாச்சு
பறைகிறேன் மனதுக்கும் வியானனுக்கும்
பார்மகனே புத்தியதிற் பிறந்தவாறே. (8)

வாறான புத்திக்கு முதானனுக்கு
மருவியதோர் சித்தமதிற் பிறந்ததப்பா;
தாறான சித்தமொடு அபானனுக்குஞ்
சண்டாளக் கோபமங்கே பிறந்ததப்பா
கூறான வாங்காரம் பிராணவாய்வு
கெடியதொரு தேகமங்கே செனித்தவாறும்
வீறான முன்சொன்ன அறிவுமைந்தா
விரிந்தாக்கால் மனமாச்சு விரைந்துகேளே. (9)

கேளப்பா மனம்விரிந்தால் புத்தியாச்சு
கொடியான புத்திநின்று விரிந்துதானால்
நீளப்பா சித்தமென்று சொல்வார்சொல்வார்
நேரான சித்தமங்கே விரிந்துதானால்
ஆளப்பா ஆங்கார மாச்சு ஆச்சு
ஆங்காரம் விரிந்தாக்கால் தேகமாச்சு
தாளப்பா வித்தேகம் பிரபஞ்சமாகி
சகலகுண சகலவர்ண மாச்சுதானே. (10)

காணப்பா முன்சொன்ன அறிவேமைந்தா
கடியதொரு ஆகாய மந்தாவந்தா
ஊணப்பா வானுக்குள் வானுய்நின்று
வொளியாச்சு அறிவுமைந்தா வூணிப்பாரு
தோணப்பா வானுக்குள் வாய்வுதோன்றிச்
சுகமான சமானனுந்தான் றோன்றிநிற்கும்
பூணப்பா வானுக்குள் வன்னிதோன்றி
புகழான தோத்திரமுந் தோன்றும்வாரே. (11)

தோன்றியவா னுக்குட்சலத் தோடுசத்தம்
சொல்முறையாய் வானுக்கு பூமிவாக்கு
ஆன்றியதோர் கானுக்கு ளாகாயமனது
அப்பனே வாயுவிலே வியானன்வாய்வு
கான்றியதோர் வாய்விற்கன லோடுதொக்கு
கடுக்கானில் சலமோடு பரிசமாச்சு
பூன்றியவா யுவிற்பூமி பாணிபாதம்
புகழாகச் சொன்னமுறை யறிந்துகொள்ளே. (12)

அறிந்திந்த வக்கினியி லாகாயம்புத்தி
ஆகாவக் கினியில்வாய் வோடுதானன்
பிறிந்துவன் னியில்வன்னி யோடுசட்சு
பேரான வக்கினியிற் சலமுடனேரூபம்
மறிந்துநின்ற அக்கினியிற் பூமிபாதம்
மருவியதோர் சலத்திலா காயஞ்சித்தம்
கறிந்துநின்ற அப்புவில்வாய் வோடபானன்
கைகடந்த வப்புவன்னி சிங்குவையுமாமே. (13)

ஆமப்பா அப்புவிலப் பொடுரசந்தான்
ஆகாகா அப்புவிலே பூமியோனி
ஓமப்பா பிருதிவியம் பரமாங்கார
மோகோகோ பூமியில்வாய் வொடுபிராணன்
தாமப்பா பிருதிவியாக் கினணம்வன்னி
தனித்தமண்ணிற் சலத்தோடு கெந்தமாச்சு
வாமப்பா மண்ணுடனே மண்ணுங்கூடில்
மருவிநின்ற வாயுருவா மக்காள்பாரே. (14)

பாரிந்த வைந்தாலே யிருபத்தைந்து
 பருவமுடன் தத்துவந்தான் பிரித்துச்சொன்னேன்
சேரிந்த யிருபத்து வைந்தேதென்றால்
 சோரான வாகாய வாயுவன்னி
காரிந்த சலத்தோடு பூமியைந்தும்
 கைமுறையாய்ச் சமானனொடு வியானன்கேளு
ஆரிந்த வுதானனபா னன்பிரானன்
 அப்பனே யிதுவைந்து மறிந்துகொள்ளே. (15)

அறிந்துரைப்பேன் தோத்திரத்தி னோடுதொக்கு
 அரியசட்சு சிங்குவையு மாக்கிராணம்
பிறிந்தைந்த தன்றிசத்த மொடுபரிசம்
 போரான ரூபமொடு ரசந்தான்கெந்தி
மறிந்துமீ தைந்துமல்லால் வாக்குப்பாத
 மருவியதோர் பாணிபா யுருவுங்கேளு
செறிந்தநின்ற வுபஸ்தமொடு ஐந்துஞ்சொன்னேன்
 சோாகத் தத்துவந்தா னிருபத்தைந்தே. (16)

ஐந்தென்ற ஞானந்தோத் திரமாந்தொக்கு
 அரிபசட்சு சிங்குவையு மாக்கிராணம்
ஐந்தென்ற கருமமெனும் வாக்குப்பாணி
 அப்பாபா யுருவதுடன் பஷமஞ்சுய்யம்
ஐந்துவை யைந்துதத் துவந்துக்கப்பால்
 அப்பனே ஆன்மாவே வஸ்துவாகும்
ஐந்தைந்தாய் நின்றதெல்லா மான்மாவாச்சு
 அப்பனே ஆதியொன்று அறிந்துகொள்ளே. (17)

அறிந்தெக்கு மொன்றான வஸ்துவல்லோ
 அப்பனே யிரண்டாச்சு அதுமூன்றாச்சு
பிரிந்துமது வைந்தாச்சு வெட்டுமாச்சு
 போாகப் பதினேழா யிருபத்தைந்தாய்
மறிந்துமது முப்பத்து ஆறுமாகி
 மக்களே தொண்ணூற்று வாறுமாச்சு
தெரிந்துமது சகலமுமாய் ஏகமாகச்
 சேர்ந்துமது நித்தியமாய் நின்றவாறே. (18)

வாருக நிர்மலமாய் நிரஞ்சனமுமாகி
மருவியதோர் நிட்களமாய் நிர்க்குணமுமாகி
தாருகப் பூரணமா யகண்டமாகி
சகலசெந்து தாபரமுந் தானேதானாய்
கூறுகப் பூரணமா யதீதமாகிக்
குவிந்தொன்றாய்ப் பின்னொன்று மில்லாதாகிப்
பேருகி வெளியாகி வெளியில்லானாய்ப்
பெருவெளியாய் ஒளிக்குள்ளே ஒளிவுமாச்சே. (19)

ஆச்சப்பா வப்பொருளோ யான்றானென்று
அறிந்துகொண்டு நானுமற்று வகண்டமாகி
ஓச்சப்பா யிருப்பார்கள் ரிஷிகள்சித்தர்
உத்தமர்க்கு அடுத்தமுறை யூணிக்கேளு
தோச்சப்பா முன்சொன்ன வஸ்துவைத்தான்
சொல்லுவார் பலபலவாய் நாமுஞ்சொல்வோம்
பாச்சப்பா யீசனென்பார் சித்தியனென்பார்
பரிவாக நாதமென்பார் மனதென்பாரே. (20)

பாரப்பா கெகனமென்பார் சத்தமென்பார்
பரிவான நாமமென்பார் புண்ணியமென்பார்
ஓரப்பா வியஷ்டியென்பார் சமஷ்டியென்பார்
உத்தமொரு தத்துவட் சாந்தானென்பார்
காரப்பா வுண்மைமுதற் காரணந்தான்
கைகடந்த யோகமென்பார் சுழுத்தியென்பார்
நேரப்பா லெட்சியமாய் நின்றதென்பார்
நிறைந்துநின்ற தாரகமா மென்பார்காணே. (21)

காணப்பா ரேசகமாய்ப் பூரகமுமாகிப்
க்திரொளியாய் நின்றதும் பகமேயென்பார்
ஆணப்பா அநேகவித மாகச்சொன்ன
ஆதியெல்லா மான்மாவி லிடத்தேநின்று
தோணப்பா வெளியாச்சு வெளியேதென்றால்
சொற்பெரிய யீசரர்க்கு நாமமாச்சு
ஊணப்பா யீரிரண்டு யீசானுமாய்கை
ஓகோகோ நித்தியமொடு அநித்தியமாச்சே. (22)

ஐந்தெழுத் தைந்தறைக் கார்ந்திடு மவ்வாறே
சிந்தையுட் கண்டறிநீ குதம்பாய்
சிந்தையுட் கண்டறிநீ. (157)

வாதநிலை கூறல்.

ஆறாறு காரமும் நாறுமே சேர்ந்திடில்
வீறான முப்பாமடி குதம்பாய்
வீறான முப்பாமடி. (158)

விந்தொடு நாதம் விளங்கத் துலங்கினால்
வந்தது வாதமடி குதம்பாய்
வந்தது வாதமடி. (159)

அன்பினைக் கொண்டந்த வப்பினைக்கட்டினால்
முப்பூ வாகுமடி குதம்பாய்
முப்பூ வாகுமடி. (160)

உள்ளக் கருவியே யுண்மை வாதமன்றிக்
கொள்ளக் கிடையாதடி குதம்பாய்
கொள்ளக் கிடையாதடி. (161)

பெண்ணாலே வாதம் பிறப்பதே யல்லாமல்
மண்ணாலே யில்லையடி குதம்பாய்
மண்ணாலே யில்லையடி. (162)

ஐந்து சரக்கொடு விந்துநா தஞ்சேரில்
வெந்திடும் லோகமடி குதம்பாய்
வெந்திடும் லோகமடி. (163)

வயித்தியங் கூறல்.

முப்பிணி தன்னை யறியாத மூடர்கள்
எப்பிணி தீர்ப்பாரடி குதம்பாய்
எப்பிணி தீர்ப்பாரடி. (164)

எட்டெட்டுங் கட்டி யிருக்குமேற் நீயினிற்
விட்டோடும் நோய்களெல்லாம் குதம்பாய்
விட்டோடும் நோய்களெல்லாம். (165)

நாடி யொருபது நன்கா யறிந்திடில்
ஓடிவிடும் பிணியே குதம்பாய்
ஓடிவிடும் பிணியே. (166)

சத்தவகை நாறு தன்னை யறிந்தவன்
சுத்த வயித்தியனே குதம்பாய்
சுத்த வயித்தியனே. (167)

வாயு வொருபத்தும் வாய்த்த நிலைகண்டோன்
ஆயு வறிவானடி குதம்பாய்
ஆயு வறிவானடி. [168)

ஆயுள் வேதப்படி யவிழ்த முடித்திடில்
மாயும் வியாதியடி குதம்பாய்
மாயும் வியாதியடி. (169)

கற்பநிலை கூறல்.

பொற்பாக்த முப்பூவைப் போதம் போசித்தவர்
கற்பாந்தம் வாழ்வாரடி குதம்பாய்
கற்பாந்தம் வாழ்வாரடி. (170)

வேவாத முப்பூவை வேண்டியுண் டார்பாரில்
சாவாமல் வாழ்வாரடி குதம்பாய்
சாவாமல் வாழ்வாரடி. (171)

விந்து விடார்களே வெப்ப கடலையில்
வெந்து விடார்களடி குதம்பாய்
வெந்து விடார்களடி. (172)

தோல்லை சடம்விட்டுச் சுட்ட சடக்கொண்டோர்
எல்லையில் வாழ்வாரடி குதம்பாய்
எல்லையில் வாழ்வாரடி. (174)

தோற்பையை நீக்கிநற் சோதிப்பை கொண்டவர்
மேற்பைகந் தன்பாரடி குதம்பாய்
மேற்பைகந் தன்பாரடி. (174)

மாற்றினை பெற்ற வயக்குமெய் யோர்களே
கூற்றினை வெல்வாரடி குதம்பாய்
கூற்றினை வெல்வாரடி. (175)

ஸ்தலங்களிவை யெனல்

கோயில் படிதேடிக் கும்பிட்ட தாலெனக்
கேயும் பலன்வருமோ குதம்பாய்
ஏயும் பலன் வருமோ. (176)

சித்தத் தலம்போலத் தெய்வ மிருக்கின்ற
சுத்தத் தலங்களுண்டோ குதம்பாய்
சுத்தத் தலங்களுண்டோ. (177)

மெய்த்தலத் தில்லாத மெய்ப்பொரு ளானவர்
பொய்த்தலத் தெய்வதுண்டோ குதம்பாய்
பொய்த்தலத் தெய்வதுண்டோ. (178)

சிற்பர்கள் கட்டுங் திருக்கோயி லுள்ளாகத்
தற்பரம் வாழ்வதுண்டோ குதம்பாய்
தற்பரம் வாழ்வதுண்டோ. (179)

தன்னாலுண் டாஞ்சிஷ்டி தன்னாலே சிஷ்டித்த
புன்கோயி லுள்ளவன்யார் குதம்பாய்
புன்கோயி லுள்ளவன்யார். (180)

அன்பான பத்த ரகக்கோயில் கர்த்தற்கே
இன்பான கோயிலடி குதம்பாய்
இன்பான கோயிலடி. (181)

## தேவநிலை யறிதல்.

தன்னுள் விளங்கிய சம்புவைக் காணாது
மன்னுந் தலத்தெய்வதென் குதம்பாய்
மன்னுந் தலத்தெய்வதென். (182)

இருந்த விடத்தி லிருந்தே யறியாமல்
வருந்தித் திரிவதென்னே குதம்பாய்
வருந்தித் திரிவதென்னே. (183)

காசி ராமேச்சுரங் காணவேச் சென்றாலும்
ஈசனைக் காணுவையோ குதம்பாய்
ஈசனைக் காணுவையோ. (184)

பூவநில் நாளும் பொருந்தித் திரியினும்
தேவனைக் காணுவையோ குதம்பாய்
தேவனைக் காணுவையோ. (185)

உள்ளங்கால் வெள்ளெலும் பாகவு லாவினும்
வள்ளலைக் காணுவையோ குதம்பாய்
வள்ளலைக் காணுவையோ. (186)

போரினி லூசி பொறுக்கத் துணிதல்போல்
ஆரியத் தேடுதலே குதம்பாய்
ஆரியத் தேடுதலே. (187)

சாதனை யாலே தனிப்பதஞ் சேரார்க்கு
வேதனை யாகுமடி குதம்பாய்
வேதனை யாகுமடி. (188)

வேதனை நீக்கி விடாது தொடர்ந் தோரே
காதனைக் காணுவர்காண் குதம்பாய்
காதனைக் காணுவர்காண். (189)

நாடி வழக்க மறிந்து செறிந்தவர்
நீடொளி காணுவரே குதம்பாய்
நீடொளி காணுவரே. (190)

அஞ்ஞானங் கடிதல்.

மீளா வியாதியில் மேன்மேலும் நொந்தார்க்கு
காளேது கோளேதடி குதம்பாய்
காளேது கோளேதடி. (191)

தீட்டா வுடம்பு திறங்கொண் டிருக்கையில்
தீட்டென்று சொல்வதென்னை குதம்பாய்
தீட்டென்று சொல்வதென்னை. (192)

செத்தபின் சாப்பறை செத்தார்க்குச் சேவித்தல்
சத்த மறிவாரடி குதம்பாய்
சத்த மறிவாரடி. (193)

தந்தைதாய் செய்வினை சந்ததிக் காமென்பார்
சிந்தை தெளிந்திலரே குதம்பாய்
சிந்தை தெளிந்திலரே. (194)

பிள்ளைகள் செய்தன்மம் பெற்றோர்க் குறுமென்றல்
வெள்ளறி வாகுமடி குதம்பாய்
வெள்ளறி வாகுமடி. (195)

பந்தவினைக் கேடாய்ப் பாரிற் பிறந்தோர்க்குச்
சொந்தம தில்லையடி குதம்பாய்
சொந்தம தில்லையடி. (196)

பார்ப்பார் சடங்கு பலவின்று பாரிலே
தீர்ப்பாக யெண்ணிடுவாய் குதம்பாய்
தீர்ப்பாக யெண்ணிடுவாய். 197

அந்தணர்க் காவை யளித்தோர்க ளாவிக்குச்
சொந்தமோ முத்தியடி குதம்பாய்
சொந்தமோ முத்தியடி. 198

வேதியர் கட்டிய வீணான வேதத்தைச்
சோதித்துத் தள்ளடி குதம்பாய்
சோதித்துத் தள்ளடி (199)

தன்பாவம் நீக்காத தன்மயர் மற்றவர்
வன்பாவம் நீக்குவரோ. குதம்பாய்
வன்பாவம் நீக்குவரோ. (200)

வேள்வியி லாட்டினை வேவச்செய் துண்போர்க்கு
மீள்வழி யில்லையடி குதம்பாய்
மீள்வழி யில்லையடி. (201)

வேதம் புராணம் விளங்கிய சாஸ்திரம்
போதனை யாகுமடி குதம்பாய்
போதனை யாகுமடி. (202)

யாகாதி கன்மங்கள் யாவுஞ் சடங்குகள்
ஆகாத செய்கையடி குதம்பாய்
ஆகாத செய்கையடி (203)

சாற்றுஞ் சகுணங்கள் சந்தியா வந்தனம்
போற்று மறிவினமே குதம்பாய்
போற்று மறிவினமே. (204)

ஆனதோர் நாளென்றல் லாகாத நாளென்றல்
ஞானமில் லாமையடி குதம்பாய்
ஞானமில் லாமையடி. (205)

அஞ்சன மென்ற தறியாம லேய்க்குதல்
வஞ்சனை யாகுமடி குதம்பாய்
வஞ்சனை யாகுமடி. (206)

மாயவித்தை பல மாநிலத்திற் செய்கை
நியமொழி லாமடி குதம்பாய்
நியமொழி லாமடி. (207)

கருவை யழித்துக்கன் மத்தொழில் செய்குதல்
திருவை யழிக்குமடி குதம்பாய்
திருவை யழிக்குமடி. (208)

மாரணஞ் செய்துபல் மாந்தரைக் கொல்வது
சூரண மாக்குமடி குதம்பாய்
சூரண மாக்குமடி. (209)

பொய்பான சோதிடர் பொய்மொழி யாவுமே
வெய்ய மயக்கமடி குதம்பாய்
வெய்ய மயக்கமடி. (210)

மெய்க்குறி கண்டு விளங்க வறியார்க்குப்
பொய்க்குறி யேதுக்கடி குதம்பாய்
பொய்க்குறி யேதுக்கடி. (211)

நாயாட்ட மாடி நகைத்துழல் மூடர்க்குப்
பேயாட்ட மேதுக்கடி குதம்பாய்
பேயாட்ட மேதுக்கடி. (212)

மந்திர மூலம் வகுத்தறி யாதார்க்குத்
தந்திர மேதுக்கடி குதம்பாய்
தந்திர மேதுக்கடி. (213)

வாதமென்றே பொய்யை வாயிற் புடைப்போர்க்குச்
சேத மிகவருமே குதம்பாய்
சேத மிகவருமே (214)

வெட்ட வெளிதன்னை மெய்யென்றி ருப்பார்க்கு
பட்டய மேதுக்கடி குதம்பாய்
பட்டய மேதுக்கடி (215)

மெய்ப்பொருள் கண்டு விளங்கு மெய்ஞ்ஞானிக்குக்
கற்பக்க மேதுக்கடி குதம்பாய்
கற்பக்க மேதுக்கடி. (216)

காணாமற் கண்டு கருத்தோ டிருப்பார்க்கு
விஞ்ஞானமே தக்கடி குதம்பாய்
விஞ்ஞானமே தக்கடி. (217)

வஞ்சக மற்று வழிதனைக் கண்டோர்க்குச்
சஞ்சல மேதுக்கடி குதம்பாய்
சஞ்சல மேதுக்கடி. (218)

ஆதார மான வடிமுடி கண்டோர்க்கு
வாதாட்ட மேதுக்கடி குதம்பாய்
வாதாட்ட மேதுக்கடி. (219)

நித்திரை கெட்டு நினைவோ டிருப்பார்க்கு
முத்திரை யேதுக்கடி குதம்பாய்
முத்திரை யேதுக்கடி. (220)

தந்திரமான தலந்தனில் நிற்போர்க்கு
மந்திர மேதுக்கடி குதம்பாய்
மந்திர மேதுக்கடி. (221)

சத்தியமான தலத்தி லிருப்போர்க்கு
உத்திய மேதுக்கடி. குதம்பாய்
உத்திய மேதுக்கடி. (222)

நாட்டத்தைப் பற்றி நடுவணை சேர்வோர்க்கு
வாட்டங்க ளேதுக்கடி குதம்பாய்
வாட்டங்க ளேதுக்கடி. (223)

முத்தமிழ் கற்று முயங்குமெய்ஞ் ஞானிக்குச்
சத்தங்க ளேதுக்கடி: குதம்பாய்
சத்தங்க ளேதுக்கடி. (224)

உச்சிக்கு மேற்சென் றுயர்வெளி கண்டோருக்
கிச்சிப்பி னேதுக்கடி குதம்பாய்
இச்சிப்பி னேதுக்கடி. (225)

வேகாமல் வெந்து வெளியொளி கண்டோர்க்கு
மோகந்தா னேதுக்கடி குதம்பாய்
மோகந்தா னேதுக்கடி. (226)

சாகாமற் றாண்டித் தனிவழி போவார்க்கு
ஏகாந்த மேதுக்கடி குதம்பாய்
ஏகாந்த மேதுக்கடி. (227)

அந்தரந் தன்னி லசைந்தாடு முத்தர்க்குத்
தந்திர மேதுக்கடி, குதம்பாய்
தந்திர மேதுக்கடி. (228)

ஆனந்தம் பொங்கி அறிவோ டிருப்பார்க்கு
ஞானந்தா னேதுக்கடி குதம்பாய்
ஞானந்தா னேதுக்கடி. (229)

சித்திரக் கூத்தைத் தினந்தினங் காண்போர்க்குப்
பத்திர மேதுக்கடி குதம்பாய்
பத்திர மேதுக்கடி. (230)

முக்கோணந் தன்னில் முளைத்தமெய்ஞ்ஞானிக்குச்
சட்கோண மேதுக்கடி குதம்பாய்
சட்கோண மேதுக்கடி. (231)

அட்டதிக் கெல்லா மசைந்தாடும் நாதர்க்கு
நட்டணை யேதுக்கடி குதம்பாய்
நட்டணை யேதுக்கடி. (232)

முத்தி பெற்றுள்ள முயங்குமெய்ஞ் ஞானிக்குப்
பத்திய மேதுக்கடி குதம்பாய்
பத்திய மேதுக்கடி. (233)

அல்லலை நீக்கி யறிவோ டிருப்பார்க்குப்
பல்லாக் கேதுக்கடி குதம்பாய்
பல்லாக் கேதுக்கடி. (234)

அட்டாங்க யோக மறிந்தமெய்ஞ் ஞானிக்கு
முட்டாங்க மேதுக்கடி குதம்பாய்
முட்டாங்க மேதுக்கடி. (235)

வேதமடக்கி விளங்குமெய்ஞ் ஞானிக்கு
யோகந்தா னேதுக்கடி குதம்பாய்
யோகந்தா னேதுக்கடி. (235)

மாத்தானை வென்று மகிமையி லிருப்பார்க்குப்
புத்தான மேதுக்கடி குதம்பாய்
புத்தான மேதுக்கடி. (237)

செத்தாரைப் போல திரியுமெய்ஞ் ஞானிக்குக்
கைத்தாள மேதுக்கடி குதம்பாய்
கைத்தாள மேதுக்கடி. (238)

கண்டாரை நோக்கிக் கருத்தோ டிருப்பார்க்குக்
கொண்டாட்ட மேதுக்கடி குதம்பாய்
கொண்டாட்ட மேதுக்கடி (239)

காலனை வென்று கருத்தறி வாளர்க்கு
கோலங்க ளேதுக்கடி குதம்பாய்
கோலங்க ளேதுக்கடி. (240)

வெண்காய முண்டு மிளகுண்டோர் சுக்குண்டோர்க்
குண்காய மேதுக்கடி குதம்பாய்
யுண்காய மேதுக்கடி (241)

மாங்காய்ப் பாலுண்டு மலைமேலிருப் போர்க்கு
தேங்காய்ப் பாலேதுக்கடி குதம்பாய்
தேங்காய்ப் பாலேதுக்கடி. (242)

பட்டணஞ் சுற்றிப் பகலே திரிவார்க்கு
முட்டாக் கேதுக்கடி குதம்பாய்
முட்டாக் கேதுக்கடி. (243)

தாழ்வார மில்லை தனக்கொரு வீடில்லை
தேவார மேதுக்கடி குதம்பாய்
தேவார மேதுக்கடி. (244)

தன்னை யறிந்து தலைவனைச் சேர்ந்தோர்க்குப்
பின்னாசை யேதுக்கடி குதம்பாய்
பின்னாசை யேதுக்கடி. (245)

பத்தாவுந் தானும் பதியோ டிருப்பாருக்
குத்தார மேதுக்கடி குதம்பாய்
உத்தார மேதுக்கடி. (246)

குதம்பைச் சித்தர் பாடல் உசசு
முற்றிற்று.



மதுரை திண்டுக்கல் ரோடு பங்காருசுவாமி யவர்கள் குமாரர் முத்தியாலு நாயுடு அவர்களுடைய பிரதியின்படி அச்சிடலானது.



உ

கடவுள் துணை.

அறுபத்து மூன்றுவது:

அம்பிகானந்தர் திருவாய் மலர்ந்தருளிய

# ஞானோபதேசம் உரு.

கார்சொரியும் மேனிவிநா யகனேகாப்பு
காலாங்கி காப்புகரு வூரார்காப்பு
மேர்வாரும் போகர்நந்தி பாதங்காப்பு
மெய்யான கும்பமுனி மிகவேகாப்பு
தார்வளரும் சித்தருட பாதங்காப்பு
சாஸ்திரமுஞ் சூஸ்திமுந் தானேகாப்பு
பார்தனிலே வகார நுறை யிருபத்தைந்தும்
பாடுதற்கு மூலமெந்தன் பட்டர்தானே. (1)

பாட்டர்திரு மூலருக்கு மூன்றும்போன்
பாங்கான போகருக்கு நாலாம்பிள்ளை
நாட்டமாய் அம்பிகா னந்தனென்பேர்
தாயான அம்பிகையைத் தானேபோற்றி
மூட்டினேன் வாதமெழு நூற்றிப்பத்தில்
முன்னூற்றி யிருபதிலே வாசியோகம்
பூட்டினேன் வயித்தியமீ ராறுனூறில்
பொன்கபிலை சித்தரிடம் புகழ்ந்திட்டானே. (2)

புகழ்ந்திட்ட கபிலாசச் சட்டைநாதர்
புதல்வனெனும் சுந்தரர்யென் னூலைப்பார்த்து
இகழ்ந்திட்ட நூல்களிலே மூலந்தன்னை
இப்படியும் வெளியாகச் சொல்லலாமோ
நிகழ்ந்திட்ட இருவருக்குந் தர்க்கமாச்சு
நிமிஷத்தில் நூல்மறைத்தார் நின்றசித்தர்
பகர்ந்திட்டேன் கோபத்தா லிந்நூலைப்
பார்த்தவரு மெனக்காகப் பயந்திட்டாரே. (3)

பயந்திட்ட மூவவர்க்கத் தாரேசித்தர்
பகைபண்ணக் கூடாதென் றிருபத்தஞ்சும்
ஜெயம்பெற்ற நூலென்று வெளியில்விட்டார்
சித்தர்சொன்ன நூலெல்லா மிதுக்கீடல்ல
மயம்பெற்ற வாதத்துக் காதியென்ன
வாசியென்ற யோகத்துக் காதியென்ன
நயம்பெற்ற ஞானத்துக் காதியென்ன
நலமான கற்பமுதற் குளிகைகேளே. (4)

கேளப்பா வாதத்துக் கங்கியுப்பூ
கிடைத்த அங்கிபட்டரசம் கற்பத்துக்கு
தாளப்பா கேசரத்தில் மௌனயோகம்
சகசமற்ற சாந்தியிலே ஞானத்துக்கு
சூளப்பா சாரணைக்கு ஆதிசத்து
சுகமான செயநீர்க்கு வீரமாதி
வாளப்பா செந்தூரந் தனக்குக்கெந்தி
வர்னமென்ற மெழுகுக்குத் தங்கமென்னே. (5)

தங்கமென்ற மெழுகுக்கு வீரமாதி
சரக்கான கட்டுகளுக் காதிசுண்ணம்
பங்கமில்லாச் சுண்ணத்துக் கிணங்கியுப்பு
பாங்கான புறுகுவுருக் கினத்துக்காதி
அங்கமாம் புடத்துக்குப் பரியேயாதி
அனைத்தையுமே கொல்லுதற்குச் சூதமாதி
உங்களால் முடியாது பிரித்துப்பார்க்க
ஒருகோடி துரைக்கெல்லாம் வழலையொன்றே. (6)

ஒன்றான வழலையென்ற அங்கியுப்புக்
கொப்புமுண்டோ யென்றாலே வுரைக்கப்போமோ
குன்றான பூமியெல்லா மோடினாலும்
குருவழலை யுப்பறியக் கூடாதையா
மன்றான பூமடவார் கையைப்பாரு
வலதிடக்கை பூண்டகங் கணத்தைப்பாரு
நன்றான ரெங்கிருந்த பூமிபாரு
நல்லபச்சை மஞ்சள்நிறம் காட்டிப்பாரே. (7)

பாரடா அந்தநிலம் உனக்கே சொந்தம்
　　பாங்கிவனை செய்திடுவோர் தனக்கேசொந்தம்
ஊரடா வெனுக்கும்வன் று னுக்குச்சொந்தம்
　　உன்னிலமும் அவர்நிலமும் வேறேஉண்டு
சேரடா குறிஞ்சிநெய்தல் மருதம்முல்லை
　　நியான பாலைநிலம் அஞ்சுக்குள்ளே
நீரடா பாலைநிலம் கசிவுகண்டால்
　　நிலத்திலே குடிசைகட்டி நிலைத்துக்கொள்ளே. (8)

கொள்ளப்பா கசிவெடுக்கும் நாள்தானென்று
　　கூறினல் சித்தர்பகை உத்தமாகும்
விள்ளப்பா பிரமகற்பம் மேற்கேயென்பார்
　　விரான பாரையுப்பு கிழக்கேயென்பார்
துள்ளப்பா யிதுமூன்றும் பூமிநாதம்
　　சோதித்தால் வோரிடத்திற் குடியுமாச்சு
தள்ளப்பா அஞ்சிலே ரெண்டேநன்று
　　தானறிந்தாற் சமுசியங்கள் தள்ளிப்போச்சே. (9)

போச்சப்பா அண்டத்தி லடக்கித்தானே
　　பூமிதனிற் சுன்னாம்புக் கல்போல்நிற்கும்
ஏச்சப்பா பச்சையிலே பாலைமேனி
　　இளக்குமரி இளக்குபப்பால் யிளக்தன்னீரில்
காச்சப்பா டீப்பூவுக் கொன்றாந் திசைசூ
　　கடற்கிளிஞ்சில் திராவகமே யிரண்டாம்திசைசூ
மூச்சப்பா அண்டநிறம் மூன்றாம்திசைசூ
　　முக்கியமா மாமென்று மொழிந்திடாரே. (10)

மொழிய வில்லை அஞ்சிலே ரெண்டுநிச்சை
　　மூலத்திற் பிராணவசீர் ஊட்டவேணும்
தெளியவில்லை யென்பார்கள் அக்கியென்றால்
　　நிய்க்காடு நீர்க்காடாய்த் தெரிந்திட்டாதோ
பளிச்சென்ற ரவிமுகத்தைப் பார்க்கும்போது
　　பட்டவிடக் தொட்டவிட மெல்லாம்பொன்னும்
கழிபதித்தால் நடுவிலொரு கலையைத்தள்ளி
　　சவாத சாந்தப் பெருவெளியிற் சொக்குவீரே. (11)

சொக்குதற்குக் குருசொல்ல வேணும்வேணும்
சொல்லாட்டால் யென்றாலே சொல்லவேணும்
சிக்குதற்கு மூலத்தில் வாசியோகம்
சிகாரத்தை மேலெழுப்பச் சித்தம்பானம்
முக்கியமாய்ச் சந்திரகலை பதினாறுக்குள்
முகிழ்ந்தவிரல் காலையல்லோ நிறுத்தவேணும்
அக்கரையிற் பசுப்போலே யிங்குமக்கும்
அல்லவதினால் மவுனவித்தைக் காகாதென்னே. (12)

ஆகாத மேல்வாசிக் குகையினுள்ளே
அடையோகஞ் சாதித்தாற் பிராணவாய்வு
போகாதோ கேசரத்தி லாயிரத்தெண்மலரில்
பூண்டவருந் தேனமிர்தம் பொசித்திடாரோ
சாகாதோ சஞ்சிதமே யாபாரங்கள்
நல்வினையும் தன்னையுமே தானேகண்டாற்
போகாதோ பூர்பிறப்பு ஞானகற்பம்
பூரணத்தைக் கண்டவரே புலனற்றாரே. (13)

புலனற்ற பேர்க்கல்லோ ராஜயோகம்
பூட்டினார் புசண்டருமே கொங்கணர்க்குச்
சலனத்தைத் தவிழ்ப்பதற்கு அடயோகந்தான்
சாதித்தால் ராஜாங்கந் தானேசித்தி
மலமற்று வெளியில்வரும் ராஜாங்கந்தான்
மாறுபட்ட மில்லாமற் சித்தியானால்
உலவற்ற ஞானியென்று அவர்க்குப்பேராம்
உடலிலே கத்திகடு வோடும்பாரே. (14)

ஓடாமல் நாசியிலே பிராணவாய்வு
உதரத்திற் பாய்ந்தாக்காற் காறுகெட்டு
வாடாமல் கண்கெட்டுத் தலைவெடித்து
மாண்டிறந்து போகாமல் வயணஞ்சொல்வேன்
கிடாமல் சுழிமுனையின் பொறையில்நாவை
நீட்டியே திரிவிதப் பழக்கத்தாலே
கூடாமல் சிவகலை பிராணனையா
குதமணிச் சாரணையைச் சொல்லுவேனே. (15)

சொல்லுகிறேன் உபாசமாம் வங்கத்தாலே
சூடான புடமேறி யிருகித்தானால்
வெல்லுகிறேன் லகிரிகுறை யாமல்நின்றால்
மேலான அண்டமெல்லாம் ஓடிமீளும்
புல்லிலே சிந்தினதோர் தவிட்டைப்போல
போட்டார்கள் நூல்களிலே காணமாட்டார்
கல்லிலே நாருரிக்குங் கதைதானையா
கண்கெட்ட வாதிகளைக் கண்டுபாரே. (16)

கண்டுகொள்ளும் பூவழலை யங்கியுப்பைக்
காரக்கண்டற் கிடும்போதுகடிய சுண்ணம்
மண்டிலே கடைமிட்ட சுண்ணத்தாலே
வளர்குருக செந்தூர மாகச்செய்து
உண்டுவிடு வருஷமொன்றிற் கற்பமாச்சு
உன்னுடம்பு பரவெளிக்கு ஒப்புமாச்சு
விண்டுசொல்ல வேறுமையா யிதுபோதாதோ
பேசென்ன கிழன்ன வெளிதானாச்சே. (17)

வெளியிலே வன்மனது வெளியுமானால்
வேறொன்று மில்லையடா ஞானவாழ்க்கை
தெளிவிலே மாயைவந்து மூடாதையா
தேறினபேர் தங்களுக்குத் திக்குமுண்டோ
துளியிலே காச்சிவிட்டால் திரைசுபாச்சு
சுகக்காறும் பம்பரம்போற் கைக்குள்ளாச்சு
வழியிலே கண்டதொரு குதிரைக்குந்தான்
வைக்கோ லல்லோ கடிவாளம் மாட்டியேறே. (18)

ஏற்றுத் துருசுகொண்டு முன்னேபேறு
எட்டமட்டுஞ் சாரத்தி லேற்பாரு
கூறிறுத் துளகமாம் வங்கச்சுண்ணம்
கொண்டேறி வீரத்தைத் தொட்டேபாரு
மாற்று லாயிரத்துக் கோடிமாற்று
வரையெல்லாம் பாரினிலே காத்தவர்க்குத்
தேற்றி யிப்பொருளைத் தேடவேணும்
தெளிவிலே செப்புகிற சேதிகேளே. (19)

செய்வதென்ன பரிபாஷை நூலைப்பார்த்து
தெளியாமற் குருமுடிப்பார் சிலதுபேர்கள்
மொய்தவெடி யுப்பெடுப்பார் கல்லுச்சுண்ணம்
மூட்டிடுவார் பெருவாயின் நீரினாலே
பேதைசிறு நீராலே ஆகுமென்பார்
புடவைப்பும் ச்வுக்கார வழலையென்பார்
கொய்த வைப்புப் பாஷாணச் சரக்கைச்சுட்டுக்
கோளூணி மாலைக்கண் குருடராமே. (20)

குருடரையோ சாராயங் குடித்துப்போட்டுக்
கொண்டுவா அருசைக்குரு முடிப்பேனென்பான்
திருடரையோ அவர்களைநீ சேர்க்கவேண்டாம்
ஜீவனத்துக் கேதிரிவான் சிலதுபேர்கள்
மூடரையோ கோபமாய் உருட்டிப்பார்ப்பான்
மூதேவி அவன்முகத்தில் விழிக்கவேண்டாம்
கெருடனுக்கு அடிமையாம் பாம்புக்குத்தான்
கெஞ்சுவரோ குருநூலுங் கிட்டினோர்க்கே. (21)

குருச்சொல்லும் வித்தைக்குப் பழுதோயில்லை
கூருசெட்டுச் சுட்டதெல்லாம் தோஷந்தோஷம்
குருச்சொன்ன சாஸ்திரங்கள் மெத்தவுண்டு
கோடிநூற் பார்த்தாலுங் குருவாகாது
குருச்சொன்ன நூல்களெல்லாஞ் சூக்ஷுமாகும்
குருவழலை சாஸ்திரத்தைக் குகைக்குள்வைத்தார்
குருச்சொன்ன பரிபாஷை யிதுகளெல்லாம்
கொண்டாட்ட மாகவிதை வெளிவிட்டாரே. (22)

வெளிவருமோ பரிபாஷை புதையலப்பா
விதியாளி வினையவான் காண்பதல்லால்
தெளியாத மூடருக்கு நூல்மகத்வம்
செப்புகின்ற உவமான தியானமெல்லாம்
வழியோடே தெரியாது அவர்கள்தங்கள்
மனசுக்கே சரிப்போன படியேபார்ப்பார்
அழியாத அங்கியுப்பு மரத்திறுப்பை
அண்டமென்றும் பிண்டமென்றும் ஆசிப்பாரே. (23)

அறிப்பார் வெள்ளிக்கு பீனையென்பார்
ஆத்தாக்குப் பாசாண மீகுமென்பார்
வேசியர்கள் கன்றுக்குக் கடலையென்பார்
வெங்கலத்தைக் கஞ்சமென்று விளம்புவார்கள்
பாசையாற் சொன்னாலுந் தெரியுமென்று
பழங்கதைபோற் சொல்லெடுத்துப் பாடிப்போட்டார்
தேசிகனே உங்களுக்கு யிந்தப்பாஷை
தோய்வதெப்போ சுகுர்தவான் சோதிப்பானே. (24)

சோதிப்பான் அக்கியுப்பை வழலையென்றும்
கன்னாமென்றும் பாலிலச் சூடமென்றும்
நாதிப்பான் கேசரத்திற் பிராணநிஷ்டை
ஞானமென்றும் யோகமென்றும் நல்லோர்காண்பார்
பேதிப்பாந் சாரணைக்குப் புடந்தானென்றும்
பெரிதான கற்பத்தை ரசமாமென்றும்
சாதிப்பா னிதுவெல்லாம் மனமாமென்றும்
சாஸ்திரமே யிருபத்தி அஞ்சுமுற்றே. (25)

அம்பிகானந்தர் ஞானோப தேசம் ௨௫
முற்றிற்று.

மதுரை புதுக்குடியவர் பர்வதம் சின்னைச்சாமிக் கவிராயரவர்கள் இடம் வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்தசாஸ்திரம் அச்சிடலானது.



உ

குமரன் றுணை.

அறுபத்துநான்காவது:

டமரானந்தர் திருவாய் மலர்ந்தருளிய

# சிவ நூல் சூஸ்திரம் ௬௭.

ஆனந்த நிற்குணத்தி னருளேகாப்பு
அடியேனை யாண்டநந்தி பாதக்காப்பு
தானந்த ஜனகாதி ரிஷிகட்கெல்லாம்
தாசனெனப் பேருபெத்தேன் டமரானந்தன்
மோனந்தப் பிரமவனு சந்தானத்தின்
மும்மூச்சு (தத்) துவஞான நிஷ்டைசெய்தேன்
ஞானந்தான் பேசிவைத்தேன் முப்பத்தைந்தில்
நலமான வாதவித்தை நவிலுவேனே. (1)

நவிலுவேன் சூத்திரமோ பதினேழுக்குள்
நாதாக்கள் மறைத்துவைத்த ஞாயமெல்லாம்
புவியிலுள்ளோ ரறியாமற் சித்தர்கூடிப்
பூவழலை யென்றுசொல்லும் பூட்டகத்தைச்
செவிகூர்ந்து கேளுங்க ளிந்தச்சேதி
தெருவில் வந்தா லுங்கள்தலை தெரித்துப்போகும்
தவிலடித்துப் பேசாதே ரகஸ்யமப்பா
சவுக்கார மானதென்ன தனலாம்வின்னே. (2)

விண்ணிலே மூன்றுசுடர் தோணலாச்சு
வெய்யோனுஞ் சந்த்ரனுமக் கினிதானென்பார்
மண்ணிலே வந்தவுடன் முப்பூவாச்சு
வளர்பிறையைத் தொட்டுநிற்கு மூசரந்தான்
தண்ணியிலே கண்டசிலை யருக்கனுச்சு
சமாதியுப்புச் சுண்ணமடா தளர்கூறுச்சு
பெண்ணடுக்க லாணலியுங் காணலாச்சு
பேசாதே பிண்டத்திற் பிரித்துப்பாரே, (3)

பிரித்தப்பார் வாயுவக்கி யுப்புமூன்றும்
பிண்டத்தி லப்படியே நின்றதையா
விரித்துப்பார் பிருதிவியே பிண்டம்பிண்டம்
வேறொன்று மில்லையடா விதுதான்மூலம்
குறித்துப்பா ரிடகலையிற் கலைதான்ரெண்டுக்
கூடிநிற்குஞ் சுழிமுனையின் கூர்மைதப்பி
மரித்துப்போ னல்வருமோ சிவன்தானும்
மயக்கிநின்று திரியாதே மண்ணோக்கின்டே. (4)

இன்றுவாய் பசுந்தமன்றனந் தன்னிருள்ளே
யிழிருக்கும் வழியுப்பு கணைசனுச்சு
கண்டுபார் நெற்றிக்கண் ணுடையோனென்பார்
கல்லென்பார் ஐங்காயக் கனிதானென்பார்
விண்டுபோ காதபஞ்ச மித்திரமென்பார்
விந்தென்பார் நாதமென்பார் வெடிதானென்பார்
கொண்டல்வன்னி பிசமென்பார் சுன்னமென்பார்
கோசமென்றும் பிசமென்றுங் கூறும்மேகே. (5)

ஏகாதி வஸ்துவென்று ஈ-ஊ-வென்றும்
ஏ-ஐ-ஓ ஆவென்றும் இலக்கமென்றும்
சாகாத காலென்று மதிஷ்டானமென்றும்
சாரமென்றும் பூரமென்றுஞ் சத்துவென்றும்
வேகாத தலையென்றும் வீரமென்றும்
விசுவமென்று மிரண்யகற்ப விராட்டாமென்றும்
போகாத புனலென்றும் பூரணமென்றும்
புனிலவண மென்றுசொல்லிப் பொருந்தும்பேரே. (6)

போான பரிபாஷை பேர்களெல்லாம்
பேயனுக்கும் பேதையர்க்கும் பேர்தானுச்சு
கூறான மூன்றவித மண்டபிண்டங்
கோடான கோடியெல்லா மிதற்குள்ளாச்சு
நீரான அங்கியுடன் காலுங்கூட்டி
நின்றவிடம் வழலையென்பார் நந்தியீசர்
தேறாதே போனாலும் உலகமாடே
சிவனாது மென்றானர் திரட்டிப்பாரே. (7)

பார்க்கையிலே பளிச்சென்று பிரகாசிக்கும்
பருதிமதி அக்கினியும் பாழ்போகாமற்
சேர்க்கையிலே வண்ணான்கை சிக்கிக்கொண்டால்
நிடத்துடனே சேரலாஞ் சிவயோகத்தில்
நோக்கையிலே வழலையல்லோ கற்பமாச்சு
நொந்தசடங் கற்பூர தேகமாச்சு
காக்கையல்லோ தூக்கிவிடும் மேல்மூலத்தூள்
நலமான பிராணநிற்கும் நாட்டந்தானே. (8)

தானென்ற வன்னிக்கு ஆமொன்றேபேர்
தண்ணீரும் வாய்வுக்குப் பெண்ணொன்றேபேர்
ஏனென்று சுழிமுனையே ருத்திரனாச்சு
இடகலைபிங் கலையிரண்டும் பிர்மாவிஷ்ணு
வானென்ற சிங்குவங்கு யகாரமாச்சு
வாதமென்றும் யோகமென்றும் ரெண்டேபேச்சு
ஊனென்ற சடத்துக்குள் வஸ்துவித்தை
ஒருகோடி சித்தரெல்லாஞ் செய்நிட்டாரே. (9)

செய்நிட்ட சடத்துக்குத் தாயார்மண்ணீர்
செலங்கோர்த்து நின்றவிடம் அடிதானையா
மெய்த்திட்ட வாய்வும்மண்ணுஞ் செலமுங்கூடி
விரிகடலில் நின்றவிடம் நடுவென்பார்கள்
எய்த்திட்ட அக்கினியுஞ் செலமுங்கூடி
இருந்தவிடந் தலையென் றியம்பலாகும்
கொய்த்திட்ட திரிகோண சலமுப்பூவைக்
குருமுனிவர் தானுரைத்த குறிகண்டீரே. (10)

கண்டீரோ மண்ணாலே யெல்லாமாச்சு
காயசித்தி வாதசித்தி மண்ணாலாச்சு
பெண்டீரும் பிள்ளைகளும் மண்ணாலாச்சு
பிறப்பதுவு மிறப்பதுவு மண்ணாலாச்சு
துண்டான பொருளொன்றுங் காணேனையா
தூலவிடம் பிரகிருதி சூட்சமார்க்கம்
பண்டான சேதியல்லோ வேறொன்றில்லை
பச்சையொன்று வெள்ளையொன்று பவளமொன்றே. (11)

ஒன்றான வஸ்துவுக்கு மாலைகாலை
உச்சியென்று மச்சாத்தில்-ஓ-ஆ-ஊ-வாம்
நன்றான மொழியொடு மினக்கும்பம்
காலொருமுற் புறையும்பிற் பிறைநாள்மூன்றும்
குன்றாத வாயுதிரி புரைவரைக்கும்
கூட்டிநூர் நிட்டைசக்குக் குலைந்தாயையா
என்றேதான் சொன்னவித்தை பதினேழுக்குள்
இயம்பினேன் புத்தியினு மிசைத்துபாரே. (12)

இசையாமற் செய்தாரே சவுக்காரத்தை
இச்சென்று வாசாமுங் கற்சுண்ணாம்புங்
கசிவெடுக்கக் காச்சியல்லோ பெய்மெய்க்குத்திக்
கட்டுவார் நீயனுக்குக் கலகலக்கும்
குசமசக்குச்சவுக்காரம் வண்ணானுக்குக்
கோடிவெள்ளைக் காகுமல்லாற் குருவாகாது
விசையிருந்த வாயுவக்கி அப்புமூன்றும்
வெளிப்பட்டா லுருப்படலாம் விண்ணைப்பாரே. (13)

விண்ணைப்பா ரதவற்கு மவுனமேது
விந்தைதச்சே ராதவற்குக் கற்பமேது
மண்ணைப்பா ராதவற்குக் கற்பமேது
வாசிச்சே ராதவற்கு யோகமேது
கண்ணைப்பா ராதவற்குப் பார்வையேது
காலைத்தே டாதவற்கு ஓட்டமேது
அண்ணைக்கே போனவழி யின்னைக்கேது
ஆசானைத் தேடியடி முடியைக்கேளே. (14)

முடியென்ற வன்னிகெற்பங் கிழேசென்று
முத்தப்போ லேயிருக்கு மிதுதான்சுண்ணாம்
அடியென்ற புளியதுவும் மேலாய்நிற்கும்
ஆகாச மிக்குவென்று மதற்கேபோம்
நெடியினில் போயிருக்கும் உப்புமார்க்கம்
நிலையென்றும் சொல்வார்கள் நடுவின்கூறு
இடையென்ற வஸ்துவிக்க சென்டிநற்சேர்ந்தால்
மற்றுமென்ற சவுக்கார வழியென்னே. (15)

என்னவே யானுரைக்கும் சவுக்காரத்துக்
கேணியல்லோ சாரமொடு தாருசுரெண்டும்
சொன்னபடி கேட்குமடா வீரம்பூரம்
தொட்டேறச் சகலசித்துஞ் சூதஞ்செய்யும்
விண்ணயில்லை யதினாலே அண்டகூட
மேலேறிப் பார்க்கலாம் விலாசமெல்லாம்
நன்னையன்றிப் பிரமகிலை வேறேயில்லை
சவுக்கார நிலமறிந்த சத்துருவுக்கே. (16)

சத்துபதஞ் சவிஷியாக் கிரமருக்குத்
தனதான பிள்ளைகளில் யானொருத்தன்
வித்தையெல்லாங் கண்டுகொண்டேன் வடமேர்தன்னில்
விசுவகர்மன் தனக்குமுபதேசஞ்சொன்னேன்
சித்துவினை யாடுதற்கு கிரந்தம்நூறும்
செப்பினேன் சிவநூலைத் தெளிந்துபார்த்து
அத்துவித மானதினால் டமரானந்தர்
அருளியதோர் பதினேழு மடக்கமுற்றே. (17)

டமரானந்தர் சிவநூல் சூஸ்திரம் ௰எ
முற்றிற்று.



மதுரை இராமாயணச்சாவடி த்திரு இராமசாமிக் கோனாரவர்கள் குமாரர் இருளப்பக்கோனாரவர்களிடம் வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.

உ

குமரன் துணை.

அறுபத்தைந்தாவது

வால்மீகர் திருவாய்மலர்ந்தருளிய

# சிவயோகஞானம்.

திரிமூர்த்தி தேவர்முதல் மனிதரோடு
சிவயோகம் பெற்றிருந்த மார்க்கந்தன்னைப்
பிரியமுட னுரைத்தெழுது கேட்டாய்பிள்ளாய்
பிங்கலையும் இடகலையும் மாறும்போது
அறிவுடனே சுழிமுனையில் மனத்தைவைத்து
அசையாம லொருநினைவாய்த் தாக்கும்போது
குறியான சிவயோகஞ் சித்தியாச்சு
கோடிசென்மஞ் சித்தரைப்போ லாகலாமே. (1)

கோடியென்று லொருகோடி காலமல்ல
கோடான கோடியடா கோதுமிற்றுனே
ஆதித்தருஞ் சிவசத்தி ரெண்டுபேரும்
அன்புடனே உன்னைத்தாக்கி மடியில்வைப்பார்
சாடிவிழுந் தூக்கதுபோற் சாடாமற்
றூயான மதிபரவி நடுவில்நில்லு
பாடிவிட்டேன் சிவயோக மார்க்கந்தன்னைப்
பார்த்தறிந்து அக்கியான பகையைவெல்லே (2)

பகையான கருவியெல்லா மடக்கிப்போகப்
பகருகிறே னுபாயமொன் றருவாய்ச் சொல்வேன்
திகையாதே பரதாரின் மயக்கங்கண்டு
சிற்றின்ப போகத்தில் மயங்கிடாதே
தகையேது மில்லாத உபாயஞ்சொல்வேன்
தாரணியி லித்தமுறை குருச்சாகுந்தம்
வகையான சுழிமுனையில் வாசிநாட்டி
வையகத்தி லுலகத்தோ டொத்துவாழே.

உலகத்தோ டொத்திருப்பார் யோகம்பெற்றோர்
உத்தமனே புளித்தோடு பழம்போலப்பா
கலகமென்று நூல்பார்த்துக் கலங்கவேண்டாம்
காசியென்றுந் தலமென்றும் அலையவேண்டாம்
சிலபலநூல் பலபலவா யோகஞ்சொல்லும்
சிவென்றும் வாவென்றும் செபிக்கச்சொல்லும்
பலபலவாய் நினைவானால் யோகம்போச்சு
பஞ்சிட்டுப் பாரம்வைத்து பதியிற்செல்லே. (4)

பதியான வான்பூமி யிரண்டுமொன்று
பரலோகஞ் சிவயோக மென்றுபேரு
நிதியான் வாய்வுவன்னி அப்புமூன்றும்
நிலையான அயன்மாலு மரனுமாகும்
மதியான புத்தியினு லறிந்துகொண்டு
மகத்தான மாயையது யேகமாகும்
கெதியான வுன்னுள்ள வானமாகும்
கிருபையுள்ள திருமூச்சு வாயுவாமே. (5)

ஆமப்பா வன்னியது நயனமாகும்
அப்பனே வமுதமது நாவதாகும்
ஓமப்பா நாசியது வாயுமாகும்
உத்தமனே யிருகாது வானமாகும்
தாமப்பா முன்னாரில் மார்க்கஞ்சொன்னேன்
தாரணியி லின்னதென்று விரித்துச்சொன்னேன்
வாமப்பா அக்ஷரங்க ளொன்றுமில்லை
மகத்தான வாசியுட வகையைக்கேளே. (6)

வகையான வாசியது மனமுங்கண்ணும்
மயங்காதே சிவாயமென்று புலம்பிடாதே
பகையாதே அக்ஷரங்க ளைம்பத்தொன்றும்
பரிபாஷை யாலுரைத்த நாமபேதம்
திகையாதே நாமமட் சரங்களொன்றும்
செய்யாதே அறிவுகெட்ட மனுடரைப்போல்
நகையாதே மானிடரைப் பலசாதியென்றும்
நம்பாதே நல்வெளியிற் காலைக்காரே. (7)

காரென்று முன்னோர்கள் சொன்னதாலே
கலக்காமல் நால்வழியே காக்கும்போது
ஊரென்ற பதிசென்றேன் வைசண்டங்கண்டேன்
ஒளிராத பரவெளியிற் றொளியுங்கண்டேன்
சீரென்ற சிவஞான யோகம்பெற்றேன்
செனியாமற் பேரின்ப வீடுபெற்றேன்
தூரென்ற முடிகண்டேன் நுனியுங்கண்டேன்
சூஷாதி சூஷுத்தைத் துலக்கினேனே. (8)

துலக்காத காரணத்தைத் துலக்கிச்சொன்னேன்
தூங்காமற் றாங்குநின்ற யிடமுஞ்சொன்னேன்
கலக்காதே காரணத்தை வெளிவிடாதே
காலடியை மறவாதே கண் தூங்காதே
நிலைக்காது உலகத்தோர் சொல்லும்பேச்சு
நில்லாது நிசமென்று நம்பிடாதே
வலக்காரஞ் சொல்லாதே வீண்பேசாதே
வையகத்தில் பலவேஷங் கொண்டிடாதே. (9)

கொண்டதொரு கூத்தெல்லாம் நாதன்கூத்து
குவலயத்தி லிவன்கூத்து ஒன்றுமில்லை
விண்டுரைத்தேன் சிவயோக மார்க்கமெல்லாம்
விரிவான சாஸ்திரத்தைக் குறுக்கிச்சொன்னேன்
கண்டுரைத்தார் சித்தர்பதி னெட்டுப்பேரும்
காசினியிற் பரிபாஷை யாகச்சொன்னார்
பண்டுபாம் விளம்பினதை யறியச்சொன்னேன்
பரமாக சிவயோகம் பத்துமுற்றே. (10)

வால்மீகர் சிவயோக ஞானம் ௰
முற்றிற்று.



மேலூர்த்தாலுகா கொட்டாம்பட்டி எம். கருப்பையா பாவலர் அவர்களிடமிருந்த பிரதியின்படி இந்தசாஸ்திரம் அச்சிடலானது.

உ

குருவே துணை.

அறுபத்தாறுவது:

வால்மீகர் திருவாய் மலர்ந்தருளிய

# ஞானநாடி சாஸ்திரம் ம்க.



நீடிய வாத நாடி நீர்ச்சுழல் வண்டு போலே
ஓடியே சுழலு மாகி லூண்பிலாச் சுனையே தொங்கி
நாடியே குளித்து நிற்கும் நாளிலே உடம்பு வத்தும்
சூடிய ஈச ஞானை தொல்முனி வகுத்தவாறே. (1)

உன்னிய வாத நாடி யூசிபோ லிருக்குமாகிற்
கன்னியை யறியச் சொன்னேங் கத்திரிக் காயைத் தொங்கித்
தன்னிலே வயிற்றையூதும் சபிப்பது யில்லை மந்தம்
வன்னியைப் புனைந்தோ ஞானை வருஷமேர டெட்டதாமே. (2)

கண்டது வாதநாடிக் கட்டெறும் பென்ன வூர்ந்தால்
உண்டது தொங்கி நின்ற வுடகறி சொல்லக் கேளு
முண்டது விலாவில் நிற்கும் முருங்கைக்கா யிலையே தொங்கி
லொண்டடி கழியும் வீங்கு மொன்பது வருஷந்தானே. (3)

பஞ்சிட்ட கோலைப் போலே பறையடி வாதநாடி
மிஞ்சிட்டு ஓடுமாகில் விளைந்திடும் பிணியைக் கேளீர்
அஞ்சிடும் பாவைக் காயா லடிக்குடல் தன்னில்த் தொங்கில்
வஞ்சிடும் வறச்சி தோன்றும் வருஷமோ ரெட்ட தாமே. (4)

நட்டிய வாத நாடி நடுங்கியே குளிரு மாகில்
ஒட்டிய தேங்காய்க் கிற்று உட்குடல் தன்னில் நிற்கும்
வாட்டிய வுடம்பு வத்தும் வயிறது வூதிக் காட்டுந்
தீட்டிய மாவி ஞானை சென்றது வருஷ மேழே. (5)

சத்திய வாத நாடி சக்கரம் போலே சுத்தில்
முத்திய வாழைத் தோலு முதிகிரைத் தண்டுந்தோலும்

சுத்திய குடலிற் பத்திச் சுருக்கென வலியுந் தோன்றும்
பத்திசேர் குழுவி ருனே பயவிது வருஷம் பத்தே. (6)

சுருக்கென வாத நாடி சுழல்கிரைப் போலே சுத்தி
விருக்கிய வையுங் காலு மெலும்பா வத்தி யிற்கும்
மருக்கிய வயிறு லூதும் மனமரு குருத்தாக் கொள்ளுக்
தருக்கிய கோழிபாடு தக்கிய வருஷம் பத்தே. (7)

மீறிய வாத நாடி மினைத்து போலே யேறிற்
கூறிய அவரை யிற்கிற் கொடியமின் புடலின் காயும்
ஏறியே வலது பக்கம் யெலும்பினி லொட்டிநிற்கும்
மாறியே உதிரம் விழும் வருடமெட் டதையே யாகும். (8)

கன்னிய வாத நாடி காரைபோல் நடக்கு மாகில்
உன்னிய சத்திப் புண்டா முடம்பெல்லாம் வூதி வாங்கும்
கன்னிலே குத்த முண்டாங் காந்திடும் வயிறு வீங்கும்
பன்னிமாக் கிசமே தொக்கிற் பனிரண்டு வருஷந் தானே. (9)

பல்வுரு வாத நாடி பாம்புபோற் சுத்து மாகில்
நலமுறு முன்னே சொன்ன நற்கதி தன்னை நீக்கி
இலமுறு மத்த மத்த பெக்கதி யுள்ளதெல்லாம்
சலமுறும் வயித்திற் றெக்கிச் சத்திக்கும் வருஷ மொன்றே. ()

பலகதி பொசிப்பிற் றொக்கிற் பத்தியே வுடலில்நின்று
இலகதி தன்னை யெல்லா மிரிசிக ளறியச் சொன்னேம்
கலகதி வருஷம் பத்தாக் கண்டுகொண் டுள்ள தெல்லாம்
வலுவறி புத்தில் மேவும் வால்மிக ருரைத்த வாறே. (11)

வால்மீகர் ஞான நாடி சாஸ்திரம் மிக
முற்றிற்று.

---

மதுரை வடக்குமாசி வீதியிலிருக்கும் பாத்திர வியாபாரம் க. ஈ. ம. கணபதிபிள்ளை அவர்களிட மிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி. இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



௨

குருவே துணை.

அறுபத்தேழாவது

வால்மீகர் திருவாய் மலர்ந்தருளிய

# சத்தஞானம் யசு.

இருளொளியாய் நின்ற சிவன்பாதம்போற்றி
யெழுத்திறுடை விபாத்தை விரித்துச் சொல்வேன்
அருவுருவாய் நின்றதுவே யெழுத்ததாகும்
ஆதியந்த மண்டபிண்ட மதுவேயாகும்
திருவுருவாய் ரவிமதியாய் நின்றரூபம்
சிவசத்தி திருமாலின் ரூபமாகும்
வருமுருவே சிவசத்தி வடிவதாகும்
வந்ததிலும் போனதிலும் மனத்தைவையே.

வந்ததுவும் போனதுவும் வாசியாகும்
வானில்வரும் ரவிமதியும் வாசியாகும்
சிந்தைதெளிந் திருப்பவனே சித்தன்சித்தன்
செகமெல்லாஞ் சிவமென்று அறிந்தோன்சித்தன்
நந்தியென்ற வாகனமே தாலதேகம்
நான்முகனே கண்மூக்குச் செவிநாக்காகும்
தந்திமுகன் சிவசத்தி திருமூச்சாகுந்
தந்தைதாய் ரவிமதியென் றறிந்துகொள்ளே.

அறிந்துகொள்ளும் பூரகமே சரியைமார்க்கம்
அடங்குகின்ற கும்பகமே கிரியைமார்க்கம்
பிரிந்துவரும் ரேசகமே யோகமார்க்கம்
பிரகாமல் நின்றதுவே ஞானமார்க்கம்
அறிந்துடடத் புகுதுகின்ற பிராணவாய்வு
மகத்தான சிவசத்தி யடங்கும்வீடு
சிறந்துமனம் தெளிவாகிச் சேர்ந்தோன்சித்தன்
சிவசிவா அவனவனென் றறைக்கலாமே.

ஆமப்பா வுலகத்திற் பெருநூல்பார்த்தோன்
அவரவர்கள் நடத்தையெல்லாஞ் சரியையென்பார்
ஓமப்பா கல்லுசெம்புத் தெய்வமென்று
உருதுவார் பூசிப்பார் கிரியையென்பார்
வாமப்பா யோகமென்று காய்கனியைத்தின்று
வாய்பேசா வூமையைப்போற் றிரிகுவார்கள்
காமப்பா ஞானமென்று மானம்விட்டுக்
காக்கைபித்தன் மிருகம்போற் சுற்றுவாரே. (4)

சுற்றுவார் பெருநூலைப் பார்த்துப்பார்த்துத்
தூசிப்பா ருலகத்திற் சிறிதுபேரைத்
தேற்றுவார் வயற்பிழைக்க அநேகவேசம்
தேசத்தி லணிந்துகொண்டு திரிகுவார்கள்
பற்றுவார் குருக்களென்பார் சிஷனென்பார்
பையவெதிட்சை வைப்பா ரடிமையென்பார்
கற்றுவார் திருமூர்த்தி நாமமென்று
காரணத்தை யறியாத கசடர்தானே. (5)

தானென்ற வுலகத்திற் சிறிதுபேர்கள்
சடைபுலித்தோல் காவிவஸ்திரந் தாம்பூரம்பூண்டு
ஊனென்ற வுடம்பெல்லாம் சாம்பல்பூசி
உலகத்தில் யோகியென்பார் ஞானியென்பார்
தேனென்ற சிவபூசை நிட்சையென்பார்
திருமாலைக் கண்ணெதிரே கண்டேனென்பார்
கானென்ற காட்டுக்குள் தேவர்கோடி
காரணத்தை யறியாமற் கதறுவாரே. (6)

கதறுகின்ற பேர்களப்பா கோடாகோடி
காரணத்தை யறிந்தவர்கள் கொஞ்சங்கொஞ்சம்
பதறுகின்ற பேர்களெல்லாம் பரமார்த்தத்தைப்
பத்தியிலுற் பார்த்தவர்கள் சுருக்கமப்பா
உதறுகின்ற பேர்களப்பா வுலகத்துள்ளே
உதித்தகலை தன்னிடத்தி லறியமாட்டார்
சிதறுகின்ற பேர்களைப்போற் சிதறிடாமற்
சிவசத்தி யரும்பாதைத் தன்னில்நில்லே. (7)

நில்லென்று பெரியோர்கள் பாஷையாலே
நீழுலகந் தன்னுக்குள் காலுவேதம்
வல்லமையாஞ் சாத்திரங்க ளிருமூன்றாக
வயற்பிழைக்கப் புராணங்கள் பதினெட்டாகக்
கல்லுதனைக் கரைப்பதுபோல் வேதாகமங்கள்
கட்டினா ரவரவர்கள் பாஷையாலே
தொல்லுலகில் நால்சாதி யநேகஞ்சாதி
தொகுத்தார்க ளவரவர்கள் பிழைக்கத்தானே. (8)

தானென்ற வுலகத்திற் கதையில் லாட்டால்
தன்பெருமை யாலழிந்து சனத்தில்வீழ்வார்
ஊனென்ற வுடலெடுத்தா லெல்லாம்வேறும்
உலகத்தி லவரவர்கள் பாஷைவேறும்
மானென்ற சிவகாமி சிவனுங்கூடி
மாமுனிவர் முகம்பார்த்து மறைநூல்சொன்னார்
தேனென்ற சிவகாமி யருளினாலே
திரட்டினார் வெகுகோடி தேசபாஷை. (9)

தேசத்திற் பாஷைதனை யறிந்திடாமற்
றெளிவாக வுலகத்தார் பாஷைபார்த்தோர்
ஆசிப்பா ருலகத்திற் கண்டதெல்லா
மாச்சரியந் தனைக்கண்டு அழிந்துபோனார்
வாசிதனை யறியாத சண்டிமாண்பர்
வார்த்தையினால் மருட்டிவைப்பார் மற்றபேரை
நாசிவழி நடுவில்வருஞ் சிவத்தைக்கண்டோர்
நான்முகனுந் திருமாலுஞ் சிவனுந்தானே. (10)

சிவசிவா பதினெண்பேர் பாடற்கெல்லாந்
திறவுகோல் வால்மீகர் பதினாறதும்
சிவம்பெற்ற சித்தரெல்லா மின்னூல்பார்த்துச்
சிவனேடே கோர்ச்சொன்னார் சித்தர்தா[illegible]
சவமாகிப் போகாமற் சிவனுத்தார[illegible]
மருளாதிரை[illegible] சொன்னே[illegible]

நாக்குவாய்ச் செவிமுக்கு மத்திக்கப்பால்
கடுவிடு குப்பமுத லுச்சிதொட்டுத்
தாக்குவாய் அங்கென்று அதிலேயூணித்
தாயாரைப் பூசித்து வேதமோது
வாக்குவா யசையாமல் மவுனங்கொண்டு
வாசிவரு மிடத்தில்மனம் வைத்துக்காரு
நீக்குவாய் வாசிநடு மனந்நான்புக்கில்
நினைவுஅதி லடங்கிவிடும் வரிசைகாணே. (12)

காணரிது பெவராலு மூலசூட்சம்
காண்பவனே சிவசித்த னவனேயாகும்
பூணரிது யுலகத்தி லின்றாற்கிட்டில்
பூலோக சித்தனென் றுரைக்கலாகும்
நாணரிது சிவசத்தி திருமுச்சாகும்
நாடாதே மூடருக்கு யின்றால்தன்னைத்
தோணரிது வெளியக்குச் சும்மாஆமோ
சொல்லரிது சூட்சத்தைச் சொன்னேன்பாரே. (13)

சூட்சமின்னஞ் சொல்லுகிறேன் வாசிகாணச்
சூட்சாதி சூட்சத்தைத் துறக்கப்போமோ
சாட்சியில்லை துணையில்லை கேள்வியில்லை
சந்தேக மொன்றுமில்லை வெளியைக்காண
காச்சியென்ற கெற்பத்தி லவதரிக்குமாப்போற்
காரணத்தைக்கண்றாலே கண்டிருக்க
ஆச்சுதிது வுமையாளை யிப்படியேகண்டேன்
ஆனந்தத் திருக்கூத்தி னடியைக்காரே. (14)

காப்பதற்குப் பத்திபத்தைச் சொல்லக்கேளு
காய்கனி பஞ்சபட்ச பாமானங்கள்
எப்பமுட னுண்டுகொண்டு சிவத்தைக்காரு
பென்மக்காள் சித்தருடன் குருநூல்பாரு
அர்ப்பனத்துக் கழிவில்லா திருக்கவேணும்
...ங்கள் நித்தியகர்மம் நடத்தவேணும்

தானவனு யிருக்கவென்ருல் வாசிவேணும்
தன்னுக்குள் தானின்ற யிடமும்வேணும்
வானவனுய் நின்றவர்க்கு யெல்லாஞ்சித்தி
வானுக்குள் மனமிருக்க மறிபோற்கானும்
தேனவனுஞ் சித்தருக்குத் தெவிட்டாமூலி
சிறப்பாக உடலுக்குப் பதியேயாகுக்
கோனவனு யிருக்கவென்று குறுக்கிச்சொன்னேன்
குவலயத்திற் பதினறுங் குருத்தான்முற்றே.

வால்மீகர் சுத்த ஞானம் ௰சு·
முற்றிற்று.







வால்மீகர் ஞானசாஸ்திரங்கள் நம்மிடம் அநேகம் ஏட்டுப்பிரதிகளிருப்பினும் தற்போது இவற்சிலதை அச்சி டிருக்கிறோம் மற்றவைகள் அடுத்த பாகத்தில் வெளியிட கூடும்.



மதுரை தர்சில்தார் பள்ளிவாசல்தெரு குமரவேலு ம
...ர் அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த ...

உ

குருவே துணை.

தேவ, ரிஷி, முனி, சித்தர்கள்

திருவாய் மலர்ந்தருளிய

# யோக ஞான சாஸ்திரத் திரட்டின்

மூன்றும் பாகத்தில் சொல்லியிருக்கிற

## முக்கிய விஷயங்கள்.

ஐயா! இதற்கடுத்த மூன்றும் பாகத்தில் கடைப்பிள்ளை, ஜெய னிவர், கல்லுளிச் சித்தர், கஞ்சமலைச் சித்தர், புலிப்பாணி முனிவர் ளசிக முனிவர், மிருகண்ட மகாரிஷி, குருராஜர், இராமரிஷி, அத் ரி மகாரிஷி, புசண்டமகாரிஷி, மௌனச்சித்தர், சூதமகாமுனிவர், ... தபோதனர்களாற் சொல்லப்பெற்ற இருபத்தேழு சாஸ்திரங் ந்துள்ள விஷயங்களை இதனடியிற் காணலாம். அவையாவன:

...-வது கடைப்பிள்ளை ஞானசைதன்யம் ஏழில். அறிவே குரு விளங்கும் அரிய செயலினையும், அஞ்சுபூத ஆறாதாரம், வேதாந்த ...ாந்த சூட்சும விபரங்களையும்;

69-வது கடைப்பிள்ளை ஞான சமாதி தீட்சை பதினேழில், நல்பெருகு மந்திரமும், அரிய சமாதி திட்சையும், குருவிருக்கும் ...பும், சுழிமுனை தீபசோதியும், துரியம் துரியாதீதம், கேசரி பூஜை, ...ம் பிறந்த இடத்தின் விபரங்களையும்;

70-வது கடைப்பிள்ளை ஞானத்தண்டகம் ஐம்பதில், உற்பிக்கமு ...லிருந்து மேலாதாரம் வரையுள்ள சோதிசொரூபநிலையும், ரவிமதி ...யும், சிவயோகம் நிருவிகற்ப சமாதி, அதற்குரிய மூலாட்சரங் ..., பூஜாவிதி திட்சாவிதி அமுதாசகற்பம், குளிகை ஜெபமணி ...ிய விபரங்களையும்;

71-வது கடைப்பிள்ளை ஞானக்கக்கிஷம் எண்பதில், அரிமூல மந் ..., நவக்கிரகச் சக்கரம், கருக்குரு, தேகசுத்தி, நித்தியகர்மானுஷ்டா ...தசகாதம், புருவகடு நாட்டம், தசதிட்சை, நந்திதெரிசனம், ...ரகநிவர்த்தி முதலிய விபரங்களையும்;

72-வது கடைப்பிள்ளை சிவயோக ஞானம் நூறில், வாசியோக மூலமும், காயகற்பக் குளிகையும், சாகாத்தலை வேகாக்கால் போகாப் புனல், என்பதும், வாதம் மதியமுத முதலிய விபரங்களையும்;

73-வது கடைப்பிள்ளை கலைக்கியானம் நூற்றியிருபதில், மண்டலம்மூன்றும், மந்திர மூலமும், நவகோண சக்கரம் பூஜை வரிசையும் வாசியோகமும், விசுவரூபதெரிசனமும், காயகற்ப அமுதம் முதலிய விபரங்களையும்;

74-வது கடைப்பிள்ளை ஞானதிட்சாவிதி பதினாறில், பூரண தீட்சை, அறுகோணம், நந்தி தெரிசனம், ரவிமதி சுழிமுனை முதலிய விபரங்களையும்;

75-வது ஜெயமுனிவர் திருமந்திர ஞானம் முப்பத்தேழில், யோக சாதன மர்மங்களும், வேடதாரியின் விபரீதமும், அஷ்டகணபதியின் மந்திரசித்தி முதலிய விபரங்களையும்;

76-வது கல்லுளிச்சித்தர் ஞானனந்த சூஸ்திரம் பத்தொன்பதில், மாயையை விலக்கிப் பரத்துடன் அமையும் மார்க்கமும், மருந்துகளிற்சில விபரங்களையும்;

77-வது கல்லுளிச் சித்தர் பாடல் பதினாறில், பிரபஞ்சம் பெயென்றும், பிரமமொன்றே மெய்யென்றும், அதை அனுசரித்து நடப்பதே மேலான முத்திமோக்ஷமென்றும், அஷ்டகர்ம முதலிய வாநில விபரங்களையும்;

78 வது கஞ்சமலைச் சித்தர் கலைக்கியானம், இருபத்தி மூன்றில் இடகலை பிங்கலை சுழிமுனை மதியமுதம் பஞ்சபக்ஷி அட்சரமும், அநடுமுடியும் அண்டத்திலுள்ளவை பிண்டத்திலுண்டென்ற விபரங்களையும்;

79-வது கஞ்சமலைச் சித்தர்பாடல் இருபத்தைந்தில், மாயையை நீக்கி மனம் வாக்குக்கெட்டாப் பிரமத்தில் ஐக்கியமாக வேணுமெ யதையும், அதற்குரிய சாஸ்திர விசாரணை செய்யவேணுமென்ற விபரங்களையும்;

80-வது புலிப்பாணி முனிவர் திட்சாவிதி ஐம்பதில், சித்சக்கர அட்சர மூலமந்திர பூஜாவிதிகளையும், அதற்குரிய சர்ப்ப ... எந்திர மந்திர அட்சரங்களையும், அஷ்டதிக்கு தேவதை

81-வது கௌசிகமுனிவர் ஞானசூஸ்திரம் முப்பதில், சுழிமுனை வஸ்து தெரிசனங்களையும், சித்திகளிற் சிறந்த அஷ்டமா சித்திகளையும் வேதை முதலிய விபரங்களையும்;

82-வது மிருகண்ட மகாரிஷி மெய்ஞ்ஞானம் முப்பதில், காரண குருவைக்கண்டு தொண்டு புரிந்து பூரண பேரின்ப மர்மங்களைத் தெரிந்து சாதனம் புரியும் விபரங்களையும்;

83-வது குருராஜர் ஞானரத்தினுபாணம் ஐம்பதில், காயம் அழியாதிருக்கக் கற்பமுண்டு கற்பாந்த காலம் வாழலா மென்ற விபரங்களையும்;

84-வது குருராஜர் சிவயோக சிந்தாமணி ஐம்பதில், சரியை கிரியை யோகம் ஞானம், மதிரவி சுழிமுனை வழலை செயநீர் வாத முறைகளை அனுஷ்டிக்கும் விபரங்களையும்;

85-வது இராமரிஷி சிவயோக ஞானம் பதினெட்டில், சத்தி மூலமும், பூரணசோதிப் பிரகாசமும், நந்தி தெரிசனமும், வாசியால் ரேசகபூரக கும்பகமும், அதற்குரிய மூலாட்சர விபரங்களையும்;

86-வது அத்திரிமகாரிஷி உண்மை ஞானபோதகம் முப்பதில், அண்டபிண்டம், பஞ்சபூதம், பரவான்மா ஜீவான்மா சத்திசிவம், பஞ்சாட்சரநிலை கதிர்மதி அடிமுடி ஆதிவஸ்து விபரங்களையும்;

87-வது புசுண்டர் மெய்ஞ்ஞான விளக்கம் எண்பதில், பராபர மிருக்கும் பரவிய பரப்பிர்ம வஸ்துநிலையையும், ரவிமதி சுடராகிய யோக வல்லபங்களையும், கற்பமுறை சரக்குவகை செந்தூரம் தாரம் உயிரெழுத்து முதலிய மர்மங்களையும்;

88-வது புசண்டர் ஞானகாவியம் முப்பத்துமூன்றில், தச தீட்சையும், சகலசித்தும், சந்திரபுஷ்கரணியில் ஸ்நானமும், முக்கோணத்தியல்பும், பரஞான சிவபோதப் பண்பும், பிரளய காலத்திற் பிர்மா விஷ்ணு ருத்திர ரிருக்கும் விபரங்களையும்;

89-வது புசண்டர் ஞானோபதேசம் முப்பத்திரண்டில், [illegible] பிரணவமுடிவும், அருடஞானமும், துரியாதீத பிரமநிலை [illegible] [illegible] தத்துவ முதலிய விபரங்களையும்;

90-வது புசுண்டர் ஞானசூஸ்திரம் பத்தொன்பதில், கல்லுப்புக் கட்டு குருசெந்தூரம், வேதை விபரங்களையும்;

91-வது புசுண்டர் ஞானக்குறள் பதினாறில், சின்மயத்தி னுண்மையும், அதற்குரிய விபரங்களையும்;

92-வது மௌனச்சித்தர் ஞானம் யெட்டில், சின்மய சொரூப மூலாச்சரங்களையும், மவுனதிட்சை விபரங்களையும்;

93-வது மௌனச்சித்தர் பாடல் பன்னிரண்டில், யோகசாதனைக் குரிய விபரங்களையும்;

94-வது சூதமகாமுனி ஞானசூஸ்திரம் பதினொன்கில், யோக சாதனங்களுக்குரிய மர்மங்களையும, ஆதாரமூல பிரணவ சொரூப விபரங்களையுஞ் சொல்லப் பெற்றிருக்கின்றன.

---

☞ முன்சொன்ன முதலாவது, இரண்டாவது பாகங்களில்; ஒளிமறைவாயும், பரிபாஷையாயும், பகர்ந்திருப்பதை ஆராய்ந்துணர வேண்டுமாகில் இதனடுத்த மூன்றும் பாகத்தை வாங்கி வாசித்துப் பார்க்க நன்குவிளங்கும். ஆனதுபற்றி யாவரும் மூன்றும் வாலியத்தையுஞ் சேர்த்துப் பார்க்கும்படி கோருகிறேன்.

இப்படிக்கு,

☞ இ. ராம. குருசாமிக்கோனார் ஸன்,

புஸ்தகஷாப், புதுமண்டபம், மதுரை.

. கொங்கணர் சூட்ச ஞான தெரிசனம் ஆறில் நந்திதெரி
ரந்தப் பரஞ்சோதி சூட்சமுதலிய விபரங்களையும்;

து. கொங்கணர் திருமந்திர ஞானம் பன்னிரண்டில்; பரா
ளிகான மந்திரமும், இடகலை பிங்கலையால் ரேசகபூரக
ம், உப்பு சிவன் சத்தியென்ற சுண்ணம் முதலிய விபரங்

j-வது. கொங்கணர் மெய்ஞ்ஞானம் பதிமூன்றில், அஞ்சுபூதங்
ஒன்றிலுள் ளொன்று யொடுங்கி நின்று, அறிவே நாமென்
ரணி சமாதிகூடி மதியமுதம் புசித்து பிரமத்தில் அயிக்கமாகும்
யும்;

: கொங்கணர் சுத்த ஞானம் பதினாறில், சகல காரியங்
ந்தமனமே காரணமென்றும், உயிரெழுத்துகளுக் குற்ற
நந்தியின் பிரகாச விபரங்களையும்;

கொங்கணர் உற்பததி ஞானம் இருபத்தொன்றில்,
ரித பிராணனோடு அபானவாய்வு பத்தும் மாந்தர்கள்
சரியை, கிரியை, யோகம், ஞான விபரங்களையும்;

59-வது. கொங்கணர் ஞான வெண்பா நாற்பத்தொன்பதில், சித்
தாந்தமார்க்கமாய்த் தேசியைக் காலாகக்கொண்டு, சாதனமென்னும்
ணியிலேறித் தன்னைத்தானே தெரிதற்குரிய ரேசக பூரக கும்பகம்
லிய கேசரத்தின் விபரங்களையும்;

60-வது. கொங்கணர் ஞான சைதன்னியம் நூற்றுப்பதினொன்
றில், சரியை, கிரியை, யோகம், ஞான, பூரணமும், பிராணவாய்
வுடன் தசவாயுக்களின் தொழிலும், அ வை க ள் வசிக்குமிடமும்,
தொண்ணூற்று தத்துவங்களும், சத்திதீட்சை சிவதீட்சை தச
தீட்சை யென்ற விபரங்களையும்;

61-வது. குதம்பைச் சித்தர் ஞான சூஸ்திரம் பதினெட்டில்,
சகலைக்கியான உயிரட்சரமும், குளிகை தயிலமுறை முதலிய விபரங்
களையும்;

வது. குதம்பைச்சித்தர் பாடல் இருநூற்று நாற்பத்தாறில்,
வென்றும், பேரின்பமே ஞான நிலையென்றும், சர்வம்
லிய விபரங்களையும்;

63-வது. அம்பிகானந்தர் ஞானோபதேசம் இரு... யோகஞான சாதனக்குறிப்பும், கற்பம், குளிகை, குருசெ... ணம், செந்தூரம், உருக்கினம், கட்டு, வழலை, முப்பு, மு... களையும்;

64-வது. டமரானந்தர் சிவநூல் சூஸ்திரம் பதினேழில், தலை வேகாக்கால் போகாப்புனல், இடகலை பிங்கலை சுழிமுனை, நிலைமைகளையும், குருமுடிக்கும் விபரங்களையும்;

65-வது. வால்மீகர் சிவயோக ஞானம் பத்தில், இட...லை கலை சுழிமுனையில் நின்று சிவயோகஞ் செய்து கோடா... வரை அழியாத ஜீவன் முத்தி பதமடையும் விபரங்களை

66-வது. வால்மீகர் நாடிசாஸ்திரம் பதினொன்றில் சிலேற்பன நாடியும், தேகத்தில் அமைந்துள்ள வியாதி களையும்;

67-வது. வால்மீகர் சுத்தஞானம் பதினாறில், யோகம் ஞானம், வாசியின் குறிப்பும், தன்னை யறியும் விபரங்களையு... சொல்லப்பெற்றிருக்கிறது.

இந்த முதற்பாகத்திற் சிற்சில இடங்களில் மறைபொருளா... வழுத்திய வாக்கு வல்லப வழிதுறை யாவுந் தெரிய வேண்டுமா... இரண்டாம்பாகத்தில் ஒவ்வொரு நுட்பங்களுக்குரிய உண்மை விபரங்களெல்லாம் நன்றாய் விளங்கும் ஆகையால் யாவரும் இரண்டாம் பாகப் புஸ்தகத்தையும் சேர்த்துப்பார்க்கும்படி கோருகிறேன்

இப்படிக்கு,

 இ. ராம. குருசாமிக்கோன்,

புஸ்தகஷாப், புதுமண்டபம் மதுரை.



8-வது: தெட்சணாமூர்த்தி ஞானசூஸ்திரம் பத்தில் நாசிவழி பிதேதிவாசிபார்க்கும் நாட்டத்தையும், மாசிலாச் சிலம்பொலி ஓசை கேட்கும் மார்க்கத்தையும், ஏகாந்தபூரண ஏகாட்சர விபரத்தையும்;

9-வது: தெட்சணாமூர்த்தி ஞானபஞ்சாட்சரம் ஆறில், சத்தி பஞ்சாட்சர திட்சையும், முத்திக்கு வித்தான மூல ஏகாட்சர தச திட்சையும், அதற்குரிய விபரங்களையும்;

10-வது: தெட்சணாமூர்த்தி பூஜாவிதி பத்தில் ரசமணி கட்டும் நவியத்தையும், செபமாலையால் வருஞ்சித்தியையும், வேதைசெய்யும் விபரத்தையும், சிவயோகத்துக்குரிய சிவபூஜாவிதி சித்திகளையும்;

11-வது: தெட்சணாமூர்த்தி சுத்தஞானம் பதிமூன்றில், கஞ்ச மலர்க்காலை மிஞ்சாது தூக்கித் திருநடன மாடிய அம்பலவாணன் அவையின்கண் திருவாசி நாடியும், பஞ்சபூத அட்சரங்கூடியும் ஆகாயம் நின்றநிலை யறியும் விபரங்களையும்;

12-வது: தெட்சணாமூர்த்தி ஞானச்சுருக்கம் அஞ்சில், ஆறு தலந்தாண்டி அறிவுடன் கூடுதற்கு ஆதாரமான அட்சரமும், அதற்குரியாமவுன திட்சையும், வாலைசித்தி வல்லபங்களையும்;

13-வது: கணநாதர் ஞானோபதேசப் பதினாறில் கதிர்மதி சுழிமுனையைக் கண்டகாட்சியும், களிப்புற்று அடிமுடி காணும் பிர்ம நிஷ்டை முதலியவைகளையும்;

14-வது: சுப்பிரமணியர் ஞானச்சுருக்கம் ஒன்றில் சேண்வரை மனஞ்செலுத்திச் சிறுவாசற்குள்ளே சென்று அசபைப்பார்த்து, ஐம் புலனை யண்டமதிற் சேர்த்துச் சிலம்பொலியுங் கேட்கச் சிவசோதி முதலிய தெரிசன விபரங்களையும்;

15-வது: சுப்பிரமணியர் ஞானச்சுருக்கம் இரண்டில், யோக ஞான சாதனத்துக்குரிய மூலமந்திர மவுனட்சரங்களையும், ரவிமதி சுழிமுனை நாடி யுதித்தொடுங்கும் விபரங்களையும்;

16-வது: சுப்பிரமணியர் ஞானனந்தம் அஞ்சில், நாவினாலடைக்...ல் நன்மனதை யுண்ணாக்குநேராய் அண்டவுச்சிதன்னில்மேவிப்...ம் வாசியையும், அவ்வாசி பிடரிமார்க்கம் கசிந்துருகி யிரங்கும் ...ங்களையும்;

17-வது: சுப்பிரமணியர் சுத்தஞானம்எட்டில், பூரணகுண்டலி... சித்தியும், நந்திகோலுவிருப்பு ஆரணத் துட்பொருளாகிய ...யுதன் உயிரட்சரம் அஷ்டமாசித்தி விபரங்களையும்;

18-வது: சுப்பிரமணியர் ஞானம் பதினாறில், இச்சையாய்ச் சி
வாசற்குள்ளேகி முச்சக்தி நடுவிற் பட்சமாய்ச் சென்று நிச்சயம
நின்றதையும், சுத்தகெங்கை செல்லுதற்கரிய வேதையின் சி
விபரங்களையும்;

19-வது: சுப்பிரமணியர் ஞானம் பன்னிரண்டில், பிரியாரவி
பிறக்கும் வாசியும், பிரணவ மூலமந்திரம், துரியந் துரியாதீதம் மு
கணபதி பூஜாவிதியும்;

20-வது: சுப்பிரமணியர் ஞானம் இருபதில், அஷ்டகர்
ஆகாசக் கெவுனகுளிகை, சிவயோகம், சத்திசிவபூசை, காயாதிக
வாதமுறை முதலிய விபரங்களையும்;

21-வது: சுப்பிரமணியர் ஞானம் இருபத்தைந்தில், வேதவி
சர் விபரீதமும், மேலான திரிமூர்த்திகள்செயலும், பிரளயகாலத்தி
நிலைநிற்கும் வஸ்துமுதலிய விபரங்களையும்;

22-வது: சுப்பிரமணியர் ஞானம் முப்பத்திரண்டில் அஷ்டா
யோகமும், மூலமந்திரமும், பூஜாவிதியும், சாதனவிபரமும், பிரா
யாம விபரமும், பராசத்தி சித்திவிபரமும், அதற்குரிய மூலமந்தி
சித்தி விபரங்களையும்;

23-வது: சுப்பிரமணியர் ஞானவிஞ்சைமுப்பதில், அறுகோ
திரிகோணமும், அதற்குரிய மூலமந்திரமும், அஷ்டகர்ம எந்திர ம
திரங்களும், அதன்பூசைக் கிரமங்களையும்;

24-வது: சுப்பிரமணியர் ஞானமந்திரம் ஆறில், சகலகாரியமு
சடாட்சர மூலமந்திரத்தாற் சித்தியும், சர்ப்ப விஷங்கள் எல்ல
தானே விலகவும், அதற்குரிய பூஜாவிதி முதலிய விபரங்களையும்;

25-வது: சுப்பிரமணியர் தேவிஞான தெரிசனம் பத்தில், மவு
சத்தி, நாதசத்தி, மணிபூரணசத்தி, புவனம் அண்டம் பொருந்
நின்ற விபரமும், வேதாந்த சித்தாந்த விபரங்களையும்,

26-வது: சுப்பிரமணியர் சிவயோகம் நாற்பதில், மனதை வச
படுத்தி, வஸ்துவை யடையும்பொருட்டு யோகசாதனத்தால் ஜீவா
மாவை பரமாத்மாவுடன் ஒன்று சேர்க்கும் விதியையும், ஆசன
பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம் சமாதி
அறுவகை யோகத்தின் விபரங்களையும்;

27-வது: சுப்பிரமணியர் ஞானம் முப்பத்துமூன்றில், கற்ப முறைபும், அண்டவுச்சியில்அருணன்மதிசுடர்மூன்றுஞ்சேர்ந்து ஆடம், சாகாக்கால் வேகாத்தலை போகாப்புனல் என்றவிபரங்களையும்;

28-வது: சுப்பிரமணியர் ஞானக்கக்ஷிஷம் ஐம்பத்தைந்தில்சத்தி, சக்கரம், அஷ்டகர்ம சக்கரம், அதற்குரிய மூலமந்திரத்தினால் சகல த்தாடும் விபரங்களையும்;

— 29-வது: சுப்பிரமணியர் சுத்தஞானம் நூறில். ஆகாயப்பெருமையும், ஆதியந்த மிரண்டு மொன்றாய் அல்லும் பகலும் அற்றவிடத் பூரண நிலைமையிற்பொருந்தியும், பிர்மா-விஷ்ணு-ருத்திரன்என்ற மூர்த்திகள் தெரிசனமும், நாசிநுனி சுழிமுனை நாடியும், தச நம் மதியமுத முதலிய விபரங்களையும்;

30-வது: சுப்பிரமணியர் ஞானசைதன்யம் நூற்றெட்டில், ஞானசத்தி மூலமந்திரமும், தசதிட்சையும், இடைகலை பிங்கலை சுழிமுனைநாடியின் விபரமும், பிர்மலட்சணமும், நாசிநுனி நாட்டமும், பஞ்சபூத தேவதையும், அதற்குரிய அட்சரங்களும், சொரூப தெரிசன சித்தியும், குருவுபதேசமும், சரியை-கிரியை-யோக-ஞானமென் ற விபரங்களையும்;

31-வது: போகமகாரிஷி ஞானசூஸ்திரம் ஒன்றில், நிஷ்டைக் குரிய அட்சரங்களும், அதன் சித்திவிபரங்களையும்;

32-வது: போகமகாரிஷி சமாதிநிலை பத்தில், சமாதிக்குரிய லெட்சணங்களையும், அதற்குரிய மூலமந்திர சாதனவிபரங்களையும்;

33-வது: போகமகாரிஷி ஞானசூஸ்திரம் எட்டில், சவுக்கார குருமுடிக்கும் பாகமும், வேதையின் விபரமும், சிவயோக சித்தி விபரங்களையும்;

34-வது: போகமகாரிஷி திருமந்திரஞானம் பத்தில், மூலாதார முதல் சுழிமுனை துரியாதித அவஸ்தைக்கு இருப்பிடமும், நந்திபீடம் அஷ்டசத்திவஸ்துபானம், மூலததினுண்மை சுழிமுனை நாட்டம்நிரு விகற்பசமாதி விபரங்களையும்;

35-வது: போகமகாரிஷி சிவயோகஞானம் பன்னிரண்டில், சுழிமுனை துரியம்துரியாதிதம் மணிபூரகம் பஞ்சதேவதை தெரிசனமும், இடகலைபிங்கலை சுழிமுனைமேல்வாசல் சமாதிநிஷ்டை தியானயோகமும், பூரணை அமாவாசி ரேசகபூரக கும்பக வாசிதாரணை அமுதருந்தும் விபரங்களையும்;

36-வது: போகமகாரிஷி ஞான பூஜாவிதி பதிமூன்றில் நவ... ண சக்கரமும், அதற்குரிய மூலமந்திரமும், அச்சக்கரத்தைப் பூசி... தாலடையும் பலன்களையும்;

37-வது: போகமகாரிஷி அஷ்டாங்கயோகம் இருபத்திநான்கி... இடகலை பிங்கலை சுழிமுனை யிரேசக பூரக கும்பகம் பிராணாயாமப்... கலைகள்மாறியோடலும், மதியமுதமுண்ணலும், கெவுனமணி அந்... கரணசுத்தியும், காயகற்ப செந்தூர வேதையும், அஷ்டாங்க யோ... சித்தியும், ஏகாட்சரப்பெருமையின் விபரங்களையும்;

38-வது; போகமகாரிஷி முப்பு சூஸ்திர ஞானம் ஐம்பத்தெ... றில், வாசியோடும் வழியும், வழலைமுப்பு குருமுடிக்கும் வகை... மகத்தான முப்பூ விளையும் பூமி முதலிய விபரங்களையும்;

39-வது: போகமகாரிஷி ஞானகற்ப சூஸ்திரம் ஐம்பத்து... கில், காசினியோர் கொண்டாடுங் கறியுப்பு செயநீர், சுண்ண... துருசுச்சுண்ணம், வேதை, சரக்குகள் கட்டு புளியுப்புக் காரசார... கருக்கள், உபசர சரக்குகளின் விபரங்களையும்

40-வது: போகமகாரிஷி ஞானசாராம்சம் நூறில், விந்துநாதக... யும் ரவிமதிமுப்பும், பூநீர் எடுக்குங்காலமும், வெடியுப்புசெயநீரினு... சரக்குக் கட்டுகளும், உருக்கினமும்கற்பமுறை, சிவயோகம் கெவுன... மார்க்கம், இடகலை பிங்கலை சுழிமுனை வாசியால் ரேசகபூரக கும்பக... உதிக்குமிடமும், ஒடுங்குமிடமும், அண்டம் அகண்டம் பஞ்சபூத... தேவதை, அதற்குரிய மூலமந்திர விபரங்களையும்;

41-வது: போகமகாரிஷி மெய்ஞ்ஞான போதகம் இரண்டில்... வாசியின் மூலத்தையும், மதியமுதமுண்ணும் வழியையும், நாசிமுனை... நாட்டக்குறிப்பையும், ஆத்மரூக்ஷமலெட்சணங்களையும், தெளிவாய்... தெரிவித்திருக்கின்றன.

☞ இம் முதற்பாகத்திற் சிற்சில யிடங்களில் மறைவாயு... மனதுக்கெட்டாத வழிதுறையாயும், வாக்குவல்லபமாயும் வழுத்தி... யிருப்பதைக்காணவேண்டுமானல் இதனடுத்தஇரண்டாம்பாகத்தை... பார்த்தால், அதனுண்மை நுட்பங்கள் ஒவ்வொன்றும் வெளிப்படை... வாய் நன்கு விளங்கும். ஆகையால் யாவரும்சந்தேகமற இரண்டாம் பாகத்தை அவசியம் வாங்கி வாசித்துப்பார்க்கும்படி கோருகிறேன்.

☞ இ. ராம. குருசாமிக்கோன், மதுரை.

குருவே துணை.

# தேவ, ரிஷி, முனி, சித்தர்கள்
திருவாய்மலர்ந்தருளிய

# யாக ஞான சாஸ்திரத் திரட்டின்
இரண்டாம் பாகத்தில் சொல்லியிருக்கிற

# முக்கிய விஷயங்கள்.

ஐயா! இதற்கடுத்த இரண்டாம்பாகத்தி லியம்பாநின்ற போ ாரிஷி, ாலாங்கிநாதர், கமலமகாமுனிவர், இடைக்காட்டுச்சித் ்றுக்குச் சித்தர், கொங்கணர், குதம்பைச் சித்தர், அம்பிகானந ், டமரானந்தர், வால்மீகர் முதலிய தபோதனர்களாற் சொல்லப் ்ற்ற இருபத்தாறு சாஸ்திரங்களில் விளங்கவுரைக்கும் விஷயங்களை தனடியிற் பார்க்கலாம். அவையாவன:—

42-வது. போகமகாரிஷி உபதேச ஞானம் நூற்றைம்பதில், ியால் சுழிமுனை வாசல் திறக்கவும், வல்லபமூலவட்சரமும், அடி ல் நுனிவரை அவயவப் பழக்கமும், துவாதசாந்தம் சுருதிமுடிவு ் யமுதம் குண்டலிசத்தி நந்தியொளியும், ரேசக பூரக கும்பகம் றைய வரிசையும், காயகற்பம் யோகம் ஞானம் வாதம் பஞ்சபூத யும், அஷ்டமாசித்தியும், புருவநடு அண்டவுச்சி வெளி காயத்திரி மூலமந்திரசெபம், பூரணசொரூபமும், அஷ்ட ாவிதியும், நிருவிகற்ப சமாதி, ரசகுளிகை, பரிக்குரு, ்தூரம், செயநீர், மயிர்ப்பாலம், நெருப்பாறு தாண்டி பிர்மத்தி ்க்கமாகும் விபரங்களையும்;

43-வது. காலாங்கி நாதர் உபதேச ஞானம் முப்பத்துநான்கில், பாக ஞானத் துதவியான வாசியும், கேசரத்திற் சிலம்பி நாதமும், ண்டபிண்ட மவுனபீடம், ஓங்காரக் கம்பம், நந்திவீடு, சுழிமுனை, ராணனின் மூலம், சிவயோகமர்மமும், மதியமுத முண்ணும் ்களையும்;

44-வது. காலாங்கிநாதர் ஞான சூஸ்திரம் இருபத்தொன்பதில், ், வங்கம், துருசு, குரு, குளிகை, வேதை, கட்டு, சுண்ண முத ருந்துகளையும், அதற்குரிய விபரங்களையும்;




பாமர ...

... வடிகளிலிருந்து

புதிதாய் அச்சிட்ட

# * புத்தக விளம்பரம். *



| | |
|---|---|
| வைத்திய வாதயோகஞான சாஸ்திரத்திரட்டு 1-முதல் 10-பாகங்கள் பாகம் 1-க்குவிலை ரூ | 1—0—0 |
| யாகோபுமுனிவ ரருளிய வயித்தியவாதக் கோர்வை 17-சாஸ்திரங்க ளடங்கியபெரிய புத்தகம் விலை ரூ | 8—0—0 |
| அகஸ்தியர் பன்னிருகாண்டம் 200 | 0—8—0 |
| ஷை கற்பமுப்புக் குருநூல் 200 | 0—8—0 |
| ஷை அமுத கலைக்யானம் 1200 | 0-14—0 |
| ஷை பரிபாஷை 300 | 0—8—0 |
| ஷை பூரணம் 205 | 0—8—0 |
| ஷை பூரண சூஸ்திரம் 216 | 0—8—0 |
| ஷை கற்பம் 300 | 0—8—0 |
| ஷை பரிபூரணம் 1200 | 1—4—0 |
| புலஸ்தியர் வாதசூஸ்திரம் 300 | 0—8—0 |
| கருவூரார் வாதகாவியம் 700 | 0-14—0 |
| தன்வந்திரி வயித்தியக்குருநூல் 200 | 0—8—0 |
| திருவள்ளுவர் கற்பம் 300 | 0—12-0 |
| இராமதேவர் வயித்தியகாவியம் 1000 | 1—0—0 |